# Ūḻiyaṉ

## Malar 17, itaḻ 26

## December 31, 1937

Record no. 148

THE OOLIAN REG. NO. M. 1509.

# ஊழியன்

மலர் 17
இதழ் 26

(தேசிய சித்திர வாரப் பத்திரிகை.)

விலை அணா 2
மலாய் காசு 15





அறைதைப் பெண்ணில்

31—12—1937

# ஊழியன்

ஆசிரியன்—ராய. சொக்கலிங்கன்.

மலர் கஎ. சென்னை, ஈசுவர௵ மார்கழி௴ 17௳ வெள்ளி (31-12-1937) இதழ் உக

இந்தியத்தாய் முடிசூடி எழிற்சிங்கா
தனமேறி ஈடிலாது
சொந்தவர சேபுரியத் துயர்போக்கி
யாவருமே சுகவாழ் வெய்த
இந்நிலம் வந்தவருள் இலைபிறப்பில்
இழிவுயர்வென் இயற்கை ஓங்க
சந்தலிலா ஊழியமே நான்கொண்
நல்லனவெந் நாளும் வாழ்க[டேன்

## கத்தோலிக்க காங்கிரஸ்

சென்னை நகரம் டிசம்பர் மாதம் முழுதும் மகாநாடுகளும் காட்சிகளும் நிரம்பித் திணறு மாயினும், இவ்வருடம் அது படும்பாடு விசேஷமாகக் குறிப்பிடத் தகுந்ததாகும். ஏராளமான மகாநாடுகள்-கூட்டங்கள்,-காட்சிகள் முதலியன நடைபெறுவதுடன் கதோலிக் கிருஸ்துவர்களின் காங்கிரசொன்று பிரமாதமாக நடைபெறுகிறது. நகரில் எங்கு நோக்கினும் கிருஸ்துவர்கள்; எங்கு நோக்கினும் 'பிரதர்கள்'; எங்கு நோக்கினும் பாதிரிகள்; பல பிஷப்புகள்; பல கன்யா ஸ்திரீகள்; பல குழந்தைகள்! மொத்தம் பிரதிநிதிகள் மட்டிலும் 20 ஆயிரம் பேர்கள் வந்திருக்கிறார்களாம்.

காங்கிரசில் தலைமை வகிப்பவர் மேன்மைதங்கிய — அதி பூஜ்ய—லியோ P. கேர் கெல்ஸ் ஆவர். அன்னார் கிழக்கிந்திய தீவுகளில் அப்போஸ்தலிக் பிரதிநிதியாக விருப்பவராவர். அவருக்கு போப் தற்போது தம் சார்பில் காங்கிரசில் தலைமை வகிக்க அநுமதி கொடுத்திருக்கிறார். இது ஒரு அசாதாரண நிகழ்ச்சியென்று கதோலிக்கர்கள் கருதுகின்றார்கள்.

29-ந் தேதி மேற்படி காங்கிரஸ் ஆரம்பித்தது. ஐலண்ட் கிரௌண்ட் என்ற பெரிய மைதானம் ஒரு மனிதக் கடலாக திகழ்ந்தது. அதில் ஆர்ச்பிஷப்புகள். பிஷப்புகள், பாதிரிகள், பிரதர்கள், 'நன்'கள் முதலிய எல்லோரும் வெயிலைப் பொருட்படுத்ாது குழுமியிருந்தனர். பல தலைவர்கள்—உலகில் பல விடங்களிலிருந்து—ஆசிக் கடிதங்கள் அனுப்பியிருந்தனராம். அவற்றிலொன்று ராஷ்டிரபதி ஜவஹரின் கடிதம்! தேசத் தலைவர் தேசிய காங்கிரஸ் மகாசபையின் பெயரால் 'போப் லெகேட்டான்' கிருஸ்துவ காங்கிரஸ் தலைவரை இந்தியாவுக்கு வரவேற்றிருந்தார்.

கிருஸ்துவ நண்பர்கள் ராஷ்டிரபதியின் தாராள மனப்பான்மையையும் தேசியப் பெருநோக்கையும் கவனிக்க வேண்டும். தேசிய மகாசபை ஒரு சார்பு பற்றியதோ ஒரு ஜாதிப் பற்றியதோ அன்று அது தேசமக்கட் கெல்லாம் பொது. அம்மக்களில் ஒரு பகுதியாராகிய கத்தோலிக் கிருஸ்துவர்களின் இருதயத்தில் ஒருவர் கோவில் கொள்வாரேனில் அவரை தேசிய மகாசபையும் பூசிக்கும் கடமைப்படுகிறது. அதனை ராஷ்டிரபதி வெளிப்படையாக ஓர் முக்கிய சந்தர்ப்பத்தில் காண்பித்திருப்பதை நோக்குக!

போப் லிகேட் இந்தியத் தேசியக் கோரிக்கையின் இயல்பை நன்கு அறிந்திருக்க வேண்டுமென்று கருதுகிறோம். அன்னார் மனதில் நம் தேசத்தை நடாத்தும் காந்தியடிகளின் உபதேசங்கள் ஆழப் பதிந்திருப்பதாகத் தெரிகிறது. கிருஸ்துவ காங்கிரசில் பேசும்போது அன்னார் (போப் லிகேட்) காந்திஜி அருளும் அடிப்படையான தத்

துவங்களைக் குறிப்பிட்டு அவை கிருஸ்து பெருமானின் உபதேசங்களை யொத்திருப்பது கண்டு மகிழ்ந்து புகழ்ந்தார்.

கிருஸ்துவ நண்பர்கள் போப் விகேட் கண்ட உண்மைகளைத் தெளிந்து, அதன் வழியாக காந்தியத்தை உணர வேண்டும். அவ்வாறு உணருங்கால், சிலர், "கிருஸ்துவர்களில் பலர் இந்திய தேசீயத்திற்கு எதிரிடையானவர்கள்" என்று சொல்லும் அவச்சொல் நீங்கி மறைந்துபோகும்.

நாம் கிருஸ்தவர்களெல்லாம் தேசீயப் பற்றில்லாதவர்களென்று சொல்லவில்லை. காலப் போக்கில் தேசீய மகாசபையின் இயல்பு தெரிந்து ஏராளமான கிருஸ்துவர்கள் காங்கிரசைத் தழுவி வருகிறார்கள். 29-ந் தேதியன்று கல்கத்தா செயிண்ட்பால் காலேஜில் நடைபெற்ற அகில இந்திய கிருஸ்துவர் மகாநாடு நம் கூற்றுக்கு ஓர் உதாரணம் வழங்கியிருக்கிறது. அம்மகாநாட்டில் பலர் தேசீய மகாசபையின் கொள்கைகளைத் தழுவிப் பேசியதோடு வரவேற்புக் கமிட்டி தலைவரான எஸ். ஜி. மூக்கர்ஜி வகுப்புவாதத்தை அடியுடன்கண்டித்து கிருஸ்துவர்கள் தேசீய மகாசபையைமுழு மனதுடன் ஆதரிப்பதாகக் குறிப்பிட்டார். வகுப்புத்தீர்ப்பு இந்திய ஆக்டிலுள்ள ஒரு பெரிய கரை யென்பது அவரது முடிபு. இதனை சென்னையில் காங்கிரசாகக் கூடியிருக்கும் கத்தோலிக்க நண்பர்கள் அறிவார்களாக. அவர்களது மகாநாடு வெற்றியுடைத்தாக விரும்புவதுடன் போப்விகேட்டுக்கும் இதர கிருஸ்துவப் பெரியார்கட்கும் நல்வரவேற்பு அளிக்கிறோம்.

## சிகிச்சை தேடிய நாய்

சிரிகுரியில் ஒரு ரெயில்வே ஆஸ்பத்திரி இருக்கிறது. இதை ஊர்ஜிதம் செய்து விட்டது ஒரு நாய். எப்படியா?

ஒரு நாடோடி நாய் ஒரு நாள் மோட்டார் ஒன்றில் சிக்கிக் கொண்டது. அதன் பயனாய், நாயின் மண்டையில் பலத்த காயம் ஏற்பட்டது. அடியின் வேதனை அதனால் பொறுக்க முடியவில்லை. உடனே மேலே சொன்ன ரெயில்வே ஆஸ்பத்திரிக்கு ஓடியது. அங்கிருக்கும் கம்பவுண்டர் அதனைப் பன்முறை விரட்டியடித்தான். அப்படி இருந்தும் விடாமல் நாய் மீண்டும் மீண்டும் அவனண்டையில் போயிற்று. இச்சமயத்தில் நாயின் தலையிலுள்ள அடி கம்பவுண்டரின் கண்ணில் தென்பட்டுவிட்டது. நாயின் மீது பரிதாபப்பட்டு, புண்ணைக் கழுவி மருந்திட்டான் அவன். இவ்வகையில் ஆஸ்பத்திரிக்குச் சென்று மருந்து போட்டுக்கொண்டு வந்தது பத்து நாளாக அந்த நாய். பத்தாவது நாள் புண் ஆறிவிட்டதைக்கண்ட கம்பவுண்டர் கட்டு ஒன்றும் கட்டவில்லை. இதைத்தெரிந்து கொண்ட நாய், அதன் பிறகு ஆஸ்பத்திரி வழியே திரும்புவதில்லை.

## மந்திரி கூட்டத்தில் கல்லெறி

கடந்த 26-ந் தேதி மாலை சேலம் விக்டோரியா மைதானத்தில் காங்கிரஸ் கூட்டம் ஒன்று நடைபெற்றது. கல்வி மந்திரி டாக்டர் சுப்பராயனும், சுதேசமித்திரன் ஆசிரியர் சி. ஆர். சீனிவாசனும் கூட்டத்தில் பிரசன்னமாயிருந்தனர். கனம் சுப்பராயன் பேசும் பொழுது சிலரால் கேள்விகள் கேட்கப்பட்டது. பதில் சொல்லும்போது கல்லும் மண்ணும் கூட்டத்தில் வீசி எறியப்பட்டன. குழப்பத்தைப் போலீசாரால் அடக்க முயற்சிக்கையில் மந்திரி தடைசெய்து விட்டார். அப்போது வந்த ரிசர்வ் போலீசையும் மௌனமுற சொல்லிவிட்டார்.

## சிறு துணுக்குகள்

தீனபந்து ஆண்டுரூஸ் உலகில் தாம் சென்றவிடங்களிலெல்லாம் காந்திஜி, தாகூர் ஆகிய இருவரின் நாமம் முழங்குவதாகவும் ஜவஹரின் பெயர் புதிதாக எங்கும் பரவி வருவதாகவும் கூறினார்.

* * *

அலகாபாத் ஜில்லா முஸ்லீம் லீக் மகாநாடு நடைபெற்றபோது காங்கிரஸ் தலைவர் ஊர்வலத்தைப் பின்பற்றி மகாநாட்டு தலைவர் ஜனாப் அஸீஸ் அகமதுகான் மாட்டு வண்டியில் ஊர்வலம் செய்யப்பட்டார்.

* * *

மதுரை மில்லில் நடைபெற்ற வேலை நிறுத்தத்தின் பயனாக மத்யஸ்த போர்டார் செய்த சிபார்சு ஹார்வி மில்களிலெல்லாம் தொழிலாளர்கட்கு சம்பளத்தை உயர்த்தி விட்டது.

* * *

ஹரிபுரா காங்கிரஸ் தலைவர் தேர்தலுக்கு அபேக்ஷகர் விண்ணப்பம் ஜனவரி 3-ந் தேதி வாங்கப்படுமென்று தெரிகிறது.





சினிமா விமர்சனம்

# எதிர்பாராதது

(ஆர். சாமிநாதன்)

"—அவரா! ஆ! ஆ! கெட்டிக்காரர்!—படத்தை டைரக்ட் செய்தாரே, எவ்வளவு பெரிய வெற்றி! ஆயிரம் இரண்டாயிரம் அதிகமாகக் கொடுத்தாலும் பரவாயில்லை; அவரைக்கொண்டு தான் டைரக்ட் செய்விக்க வேண்டும்."

என்று இந்த தமிழ் நாட்டிலே சிலர் சொல்லிக் கொள்வதைக் கேட்டிருக்கிறேன். சில 'கெட்டிக்கார' டயரக்டர்கள் 'டைரக்ட்' செய்த சில படங்களையும் பார்த்திருக்கிறேன். அப் படங்கள் ஒன்றுக்கொன்று எப்படியிருக்கின்றன? ஆம்—ஒன்று குரங்கானால் மற்றொன்று பிசாசு!—தொடர்ந்து இரு படங்கள் உருப்படியானதாக தமிழ் நாட்டில் எதனையும் காணோம். ஆகவே நான்,

"ஒரு படம் நல்லதாக வாய்ப்பது ஒரு 'சான்ஸே' அல்லாது மனிதனின் கெட்டிக்காரத் தனத்தினாலல்ல"

என்று நினைத்திருந்தேன்.

### வெற்றி 'சான்ஸ்'தானா

இது உண்மையான நினைப்புத்தானா? இல்லை; இல்லை. அறிவோடு, ஆற்றலோடு, விஷய முணர்ந்து டைரக்ட் செய்தால் படம் வெற்றி மேல் வெற்றியாகப் பெருகிக்கொண்டிராமல் போகாது. அதற்கு உதாரணம் வேண்டுவோர் சாந்தாராம் டயரக்ட் செய்யும் பிரபாத் (கம்பனி) படங்களைப் பார்க்க!

மனித முயற்சி அதிகப்பட அதிகப்பட படமும் அழகிலும் அந்தஸ்திலும் உயரும் என்பது நன்றாக விளங்கும்.

நான் இப்படி எழுதுவதைப் படித்தவர்கள், "சாமிநாதன் சாந்தாராமின் தம்பி போலிருக்கிறது. தமிழென்றால் அவனுக்குப் பிடியாது" என்று முடிவு செய்துவிடவேண்டாம். நல்ல படங்களை நல்லனவென்று சொல்வதும், கெட்ட படங்களை கெட்டவை என்று சொல்வதும் அன்றி, தமிழ் சினிமாக் கலையை எப்படி அபிவிருத்தி செய்யலாம் என்றும் சதா யோசிப்பதுமே என் வேலை.

* * *

இப்போது சென்னையில் பிராட்வே டாக்கீசில் Unexpected (எதிர்பாராதது) என்ற பிரபாத் படம் ஓடிக்கொண்டிருக்கிறது. அதனை எதிர்பாராமலே ஒருநாள் நான் பார்த்துவிட்டேன்; அப்படம்—என்ன சொல்வது!

### துக்காராமும் எதிர்பாராததும்

பிரபாத் படங்கள்—(ஏற்கெனவே நான் பார்த்தவைகளெல்லாம்) ஒன்றுக்கொன்று போட்டியிட்டாற்போல, பல முறைகளில் உயர்ந்தும் ஓங்கியும் பெருகியும் சிறந்துமே இலங்கின. அவற்றுள் எது மேலானது எது தாழ்வானது என்று நிடீரென கூறிவிட முடியாது. கடைசியாக வந்த துக்காராம் படம் நம் இருதயத்தையே தூக்கி மிதித்துவிட வல்லது. பம்பாயில் அப்படம் 52 வாரம் ஓடிற்றென்றால் என்னைப் பொறுத்தவரையில் ஆச்சரியப்படவே மாட்டேன். பிரபாதின் கைத்திறன்-மூளைத்திறன்—மனோதர்மத்திறன்—எல்லாம் பரிபூரணமாகப் பரிமளிக்கத்தக்கது துக்காராம். ஆனால் எதிர்பாராதது அத்துக்காராமை செவியைக் கிள்ளிப் பிடித்து அடித்துவிடும் போலிருக்கிறது.

அடித்துவிடுமென்றால் எந்த அம்சத்தில்? துக்காராமைவிட எதிர்பாராதது கதைப் போக்கில் மேலானதா? நடிப்பில் மேலானதா? ஒலி, ஒளி பதிவுகளில் மேலானதா? பாஷையில் மேலானதா? எந்த விஷயத்தில் மேலானது?

இரண்டு படங்கட்குமுள்ள வித்தியாசம் மேற்கூறிய ஏதாவதொன்றினாலல்ல. பல அம்சங்களில் அபிவிருத்தி யடைந்திருப்பதாகக் காண்கிறோம். 'எதிர்பாராதது' சாந்தாராமின் வளர்ந்து வரும் ஆற்றலின் சின்னமாக ஒளிர்கிறது;

### கதை

எதிர்பாராதது பிரபாத் கம்பனி தயாரித்த முதலாவது சமூகப் படம். அதில் விசேஷமாக கதை யெதுவும் இல்லை. ஒரு கிழ 'லாயர்' பெரிய பெரிய புத்திரிகளும், புத்திரனுமிருக்கையில், ஒரு அநாதையான இளம் பெண்ணை மறுமணம் செய்கிறான். அப்பெண் தன் பரிதாப நிலைமையைக் கண்டு மனஞ் சோர்ந்து வருந்துவதோடு கிழவனின் இச்சைக்கு இணங்காத கன்னியாக இருந்துவருகிறாள். கடைசியில் கிழவன் மனம் மாறிவிட, அப்பெண்ணுக்கு விடுதலை தந்துவிட்டு தற்கொலை செய்துகொள்கிறான்.

இக்கதையை திரையில் பார்த்தால் நம்மை யறியாமலே எவ்வளவு பிரமிப்படைகிறோம்.

### சில நடிகர்கள்

நடிகர்களில் யார் யாரைவிட மேல் என்று சொல்லிவிட முடியாது. பிரபாதின் இரத்தினங்களில் ஒன்றான

சாந்தா ஆப்தே (—கதையிலேயே ஓமிந்துஸ்தானி ஜிரேடா கார்போ என்று நம்மை அழைக்கும்படி செய்கிறார் சாந்தாராம். அதனால் சாந்தா ஆப்தேக்கு இழுக்கு வந்துவிடாதோ என்பவர் சில நாட்களில் காண்போம்.) கதாநாயகி (நிர்மலா)யாக நடிக்கிறாள். அவளது நடிப்பழகை வாசகர் முன் வர்ணிப்பது கொல்லத் தெருவில் ஊசி விற்ற கதையாகவே முடியும்.

அவளோடு மற்றொரு இரத்தினம் வாசந்தி நடிக்கிறாள். அவள் மற்றப் படங்களை 'தூக்கியடித்து விட்டா ளென்றால் ஆச்சரியமில்லை. சிற்றன்னை முன் முதலாவது தோன்றும்போது காண்பிக்கும் நாணமொன்றே ஒரு கோடிபெறும்.

நிர்மலாவின் மாமனாக நடிக்கும் அன்பர் பழைய 'காமிக்' புலி. அவரது நடிப்பு நடிப்புக்கலைக்கே ஓர் அழகைத் தருவது. அவர் பெண் பார்க்கவரும் கோஷ்டியாரை வரவேற்கும் செயல் ஒன்றுக்கு நம் தமிழ்ப் படங்களில் சில நிகராகும் என்றால் யாரும் வருந்த தற்கில்லை.

கதாநாயகனாக நடிக்கும் கிழவர்—ஆம் அவரே எதிர்பாராததில் உயர்தர மானவர் என்றால் எவரும் என்னை ஆக்ஷேபிக்க முடியாது. அவரது நடிப்பு முழுதும் முகபாவனையே யன்றி வேறில்லை. கண்ணாடியைப் பார்த்து வாதம் செய்யுமிடத்தில் அவரது வேகம் வெளிப்படுவதைக் கூர்ந்துபார்த்து ரசிப்பீர்களாக.

## சாந்தாராம் கைச்சரக்கு

இங்ஙனம் நடிகர்கள்போக சாந்தாராமின் கைச் சரக்கென்ன தெரிகிறது?

—நமது தமிழ்ப் படங்களில் சிங்க கர்ஜனையைக் கூட நன்றாக பதிவு செய்ய முடிவதில்லை. திரு. சாந்தாராமின் படமோ கோபம், தாபம், இரக்கம், தயாளம், ஆவேசம், கனிவு, சிரிப்பு, ஆட்டம், பாட்டு எல்லாவற்றையும் அப்படியப்படியே படம் பிடிப்பதோடு உள்ளம் கவர்ந்தெழுந்தோங்கும் அன்புச் சொற்களை அதற்குரிய தொனியில் சித்தரித்துக் காண்பிக்கிறார். அப்பால் கழுதை, குருவி, பூனை, என்பன தகுந்த விடங்களில் ஒலி தருகையில் இரவில் கீச்சிடும் 'சுவர்க்கிளி' என்ற பூச்சி வெகு அழகாகச் சத்தமிடுகிறது.

## 'லைட்' அமைப்பு

நிர்மலா கிழப்புருஷனின் அருவருப்பான செயலுக்குப் பயந்து ஒரு அறைக்குள் தன்னை தாளிட்டுப் பூட்டிக்கொண்டு இரவெல்லாம் கண் விழித்து சூரியோதயத்தை எதிர் பார்த்திருக்கும் போது சுவர்க்கிளி கீச்சிட்டுக் கொண்டிருக்கிறது. அந்த தொனியும்' சாந்தா ஆப்தேயின் முகம் உணர்த்தும் உணர்ச்சியும், அப்போது கொடுக்கப்படும் லைட்டும் அம்மா! யாருக்குத்தான் நள்ளிரவை ஞாபகமூட்டாது! நம் தமிழ்ப் படங்களிலே இராக் காட்சியைக் காண்பிக்கும்போது 12 மணி வெயில் பிரகாசிக்கிறது—இல்லை காய்கிறது. பிரபாத் படத்திலோ இரவு இரவாயிருப்பதுடன் நம் கண்ணிலிடித்து இரவென்று தாண்பிக்கவும் செய்கிறது.

—வைகறையை (பிரபாதத்தை) உணர்த்தும் ஒளி விசேஷத்தின் முன் எந்த சினிமா ரசிகன்தான் தலைபணியான்!

## 'மேக் அப்'

நிர்மலா இரவெல்லாம் கண்விழித்து தூங்காதிருக்குந்தோறும் அவள் முகம் சோர்வினால் வாடி பிரகாசமற்றுப்போக, கண் குழிவிழுந்து விடுகிறது. இதனை எவ்வாறு பட்டவர்த்தனமாக காண்பித்தாரோ சாந்தாராம்! ஒருகால் 'மேக்அப்' என்றால் ஒரே காட்சியில் பல மேக் அப்புகளை எப்படி காண்பிக்க முடியும்? சினிமா நிபுணர்களே! பிரபாத் படத்தைப் பார்த்து பல பல கற்றுக்கொள்ளுங்கள்.

## இராப்பாடி

நிர்மலாவின் சிவராத்திரி இரவு நீங்கும்போது—அதிகாலையில்— ஒரு இராப்பாடி தோள்மேல் வைத்த கழியுடன் பாடிக்கொண்டு செல்கிறான்! அப்போது பனி பிரமாதமாகப் பெய்துகொண்டிருந்தது போலும். மேகத்துக்குள் ஆளுருவம் தெரிவதுபோல இராப்பாடி நம் கண்கட்குப் புலப்படுகிறான்.

இப்படியே சாந்தாராமின் கைத்திறனை எடுத்து விரிப்பதென்றால் பல 'ஊழியன்'கள் தேவைப்படும். சுருங்கச் சொன்னால், சினிமாவுலகில் ஓர் அற்புதப் பிறவியாகிய சாந்தாராமின் டயரக்ஷனை தம் தமிழ் டயரக்டர்களும் நடிகர்களும் பார்த்து நிரம்பப் படிக்கவேண்டுவதுண்டு.

## கிராமப்போன் புதுமை

பிரபாதின் மூளைக்கு மற்றொரு உதாரணம் படத் தொடக்கத்திலேயே வெளிப்படுகிறது. அமர ஜோதியின் கதை பெரும்பாலும் கடலில் நடப்பதால் 'காண்டு' முதலியவற்றைக் காட்டும் Back Ground ஆக கடலை காண்பித்தார் என்று முன்னொரு முறை எழுதியிருக்கிறேன். அதேபோல எதிர்பாராததில் கிராமபோன் அதிகமாக நடமாடுவதால் 'காஸ்ட்' அட்டைகளெல்லாம் கிராமபோன் ரிக்கார்டுகளாகவே தென்படுகின்றன. அப்போது பின்னணி சங்கீதத்திற்கு கிராமபோன் வைக்கப்பட்டிருக்கிறது. இது சினிமாப்பட உலகில் ஒரு புதுமையல்லவென்று யார் சொல்ல துணிவர்?

மற்றொரு புதுமை சாந்தா ஆப்தேயின் பாட்டுகட்கு கிராமபோன் பின்னணி சங்கீதமாயொலிப்பதாகும்.

## சங்கீதம்

சாந்தாவின் பாட்டு (கானம்) மற்றப் படங்களைவிட எதிர்பாராததில் மிகப் பிரமாதமாய் வளர்ந்திருக்கிறதென்று சொல்லலாம். வாய் திறந்ததும் தேனைச் சொட்டுகிறாள். வாசந்தியின் பாட்டும் மிக இனிது. தெருவில் பாடித்திரியும் சிறுவனின் கீதம்—ஆம் நிகரற்றதென்றால் என் மீது எவரும் சீறிவிழ வேண்டாம்.

கடைசியாக சகுந்தலா பாராஞ்சிபேயின் முன் சாந்தா ஆப்தே Learn to Labour என்ற ஒரு ஆங்கில கீதத்தை ஆங்கில முறையில் இசைக்கின்றாளன்றோ,—அது ஆங்கில சங்கீதத்திற்கே ஒரு பாக்கியமல்லவா?

வரப்போகும் வருஷத்தில் இந்த Unexpected-க்கு சர்வதேச சினிமாக் காட்சியில் நிச்சயமாகவும் பரிசு கிடைக்குமென்று நம்பலாம்.






## நாயின் துறவு

—'கமால்'—

ராமசேஷன் ஓர் பிரம்மசாரி. வயது 23 இருக்கும். 'ஷோக்' பேர்வழி. தகப்பனார் சம்பாதித்து வைத்த சில ஆயிரங்கட்கு உரியவனாகி விட்டதால் தன் இண்டர்மிடியட் படிப்பைவிட்டு விட்டு, 'தமாஷ்' வாழ்க்கையில் ஈடுபடலானான். தமாஷ் எனவே ஸ்திரீ லோலனாகிவிட்டானென்றோ, குடிப் பழக்கமுடையவனாகிவிட்டானென்றோ கருதிவிட வேண்டாம். இலேசாக சிகரட் பிடிப்பதைத் தவிர வேறு கெட்ட பழக்கமெதுவுமில்லை. ஆனால் ஒன்று. உருப்படியான வேலை (தொழில்) எதுவும் செய்யமாட்டான். அதற்குப் பதிலாக பிராணிகளோடு பழகுவதில் பேரார்வம் காண்பிப்பான்.

அவனிடத்தில் ஒரு குச்சு நாய் இருந்தது. அதனை 'பப்பி' என்று ஆங்கிலத்தில் அழைப்பான். ஸ்வீட் பப்பி என்றும் சொல்வதுண்டு. இது தவிர அந்நாய்க்கு அவன் வழங்கி வந்த பெயர்கட்கு கணக்கில்லை. ஒரு நாளைக்கு ஒரு பெயராவது போடாமலிருக்கமாட்டான் போலிருக்கிறது. காரணம் அவன் நாயின்மேல் காண்பித்து வாஞ்சை அத்தகையது.

நாளடைவில் நாயும் தன் எஜமானின்—தோழனென்று சொல்வதே சாலும்.—இயற்கையை அறிந்துகொண்டதுபோலும். நாய்கள் சாதாரணமாகவே நுண்ணிய உணர்ச்சியும் நன்றியறிவும் உடையன வல்லவா?—

'பப்பி' ராமசேஷன் மீது அளவிலா வாஞ்சையைக் காண்பித்து வந்தது. சதா அவன் மடியில் படுத்துக்கொள்ளும். அவனோடு விளையாடும். கை கால்களைக் கடிக்கும். சிலசமயம் முகத்தைக்கூட கடிக்க ஆரம்பிக்கும். அவனோ அத்தனையையும் ருசி மிக்க அமுதம்போல் மதித்து நாய்க்கு முத்தமீவான்.

அன்றி அவன் 'பப்பியை' குளிப்பாட்டுவதிலும் அலங்கரிப்பதிலும் செலவிட்ட பொழுதோ—அம்மா எவ்வளவு!

சுருங்கச் சொன்னால் உயிர்போல் நாயை மதித்துவந்தான். எங்குச் சென்றாலும் நாய் அவன் கூடவே செல்லும். எங்கு படுத்தாலும் நாய் அவனுடனேயே படுத்துக்கொள்ளும். எங்கு சாப்பிட்டாலும் நாய்க்கும் ஒரு பங்கு கிடைக்கும்.

இப்படியே ஈருடலும் ஓருயிருமாக இருவரும் வாழ்ந்து வரவே—ஆம் நாய் என்னென்ன மனோராஜ்யம் செய்துகொண்டிருந்ததோ! யாருக்கு மிருக மனோதத்துவ சாஸ்திரம் தெரியும்!—

ராமசேஷன் வயது 24 ஆனதும் இல்லற வாழ்க்கையில் ஈடுபடலானான். அவனுடைய மாமா ஒருவர் ஒரு பெண்ணைப் பார்த்து கல்யாணம் செய்து வைத்தார். அந்தப் பெண்—நல்லவேளையாக ராமசேஷனின் மனதிற்கு பரிபூரணமாகப் பிடித்தவள். நல்ல அழகி. அழகியென்றால் வெறும் வார்த்தைகளால் வர்ணித்துவிடத் தகுந்தவளல்ல; சதா மலர்ந்த அழகு முகம்; புருஷர்கள் கண்ணுக்கு எது இனியதோ அது அவள் முகத்தில்—ஏன் உடம்பு முழுதும் மல்கியிருந்தது. அவளது பார்வையும் பேச்சும் பார்ப்பவரை ஆட்கொண்டுவிடும். பெயர் லட்சுமி. நாஸ்திகர்கட்கு லட்சுமியென்றும் பிடியா

மல் போகலாம்; ஆனால் அவ்வார்த்தையிலிருக்கும் கற்பனையை மறைக்கமுடியாதல்லவா ?

ராமசேஷனும் லட்சுமியும் இணைந்ததும் ராமசேஷன் கொண்ட ஆனந்தம் இவ்வளவுவ்வளவல்ல. அவன் தன் வாழ்வாகிய பாதையில் பொழில் சூழ்ந்த ஒரு நறுநீர்த் தடாகத்தில் இளைப்பாறுவதாகக் கண்டான். 'லட்சுமியே தன் செல்வம்; லட்சுமியே தன் புகழ்; லட்சுமியே தன் வாழ்வு' என்று நினைக்கலானான். எனவே சதா மனைவியோடு குலாவுவதும் கொஞ்சுவதும் களிப்பதும் களிப்பிப்பதுமாக விருந்தாளென்றால் வாசகர்கள் நகைப்பார்களா ?

இப்படிப்பட்ட வேளைகளில் 'அருமை பப்பி'யின் கதியென்ன ?

ஆம்—லட்சுமி வந்ததுமுதல் ராமசேஷன் அவ்வளவாக பப்பியைக் கவனிப்பதில்லை. அது (பப்பி) பலமுறை வழக்கம்போல் எஜமானனிடம் உறவு கொண்டாடிப் பார்த்தது. அவன் ஏற்றுக்கொள்ளவில்லை. ஒரு காலத்தில் அதனோடு சதா விளையாடிப்போக இப்போது சங்கிலியால் பிணைத்து தூணோடு கட்டத் தொடங்கிவிட்டான்.

பார்த்தது நாய். அதன் வயிறு எரிந்தது. பொருமை மிகுந்தது; அழுக்காறினால் புழுங்கியது; "நான் படுத்துப் புரண்ட மடிமீது ஒரு பெண்ணல்லவா இப்போது புரள்கிறாள்! நான் முத்தம் கொடுத்த கன்னங்களில் ஒரு பெண்ணல்லவா முத்தம் கொடுக்கிறாள்! நான் உருண்ட மெத்தையில் ஒரு பெண்ணல்லவா தற்போது உருள்கிறாள்! அந்தோ! பாழும் ராமசேஷன்! என்னை இவ்வாறு ஒதுக்கிவைத்தானே! இதற்காகவா அளவிறந்த வாஞ்சையைக் காண்பித்தான் !" என்று எண்ணி எண்ணி, நாய் மனம் குன்றியது. பல முறை லட்சுமியைக் கடித்துக் கொன்றுவிடலாமா வென்று நினைத்தது. ஆனால் ராமன் அவிழ்த்துவிடுவானா !

நாய்கொண்ட எரிச்சல் வளரலாயிற்று. லட்சுமியும் சேஷனும் விளையாடுவதைக் காணக்காண தனக்குள் சபித்தது. சபித்து என்ன செய்லாம்!

கடைசியில் நாய் ஏமாந்து மனமுடைந்து உடல் நலம் குன்றலாயிற்று. சில நாட்களுக்குப் பின் சரியாக உண்பதில்லை; உறங்குவதில்லை; படுப்பதில்லை.

அப்படியே இருக்க,—என்ன துணிச்சல் வந்ததோ!—

ஒரு நாள் சேஷன் சிறிது அவிழ்த்துவிடவும் சரேலென வெளியே ஓடிச்சென்று மறைந்துவிட்டது. சேஷனும் கவலையோடு தேடவில்லை.

* * *

இப்பொழுது பப்பி—ஸ்வீட் பப்பி—பெரிய நாயாகி கேட்பார் கேள்வியற்று அரியலூரில் சுற்றியலைகிறது. பழைய உடற்பொலிவும் உற்சாகமும் அதனிடம் காணப்படவில்லை. லட்சுமி எப்படியிருக்கிறாளோ!—





தமிழ் நாடகம்

# வாஸவதத்தா



By
S. K. SWAMI,
Sub-Editor, 'Tamilan'



ஹிந்தியில் மாற்றப்பட்டிருக்கும்
வாஸவதத்தா
என்ற நாடகத்தின் தமிழ் ஆக்கம்

அங்கம் 5. காட்சி 1.

இடம்: மதுராபுரி ராஜசபை.

காலம்: காலை.

[மந்திரிப் பிரதானிகள் புடைசூழ அரசர் சிங்காசனத்தில் வீற்றிருக்கிறார். வாஸவதத்தா விசனத்துடன் ஒரு மூலையில் நிறுத்தப்பட்டிருக்கிறாள். தண்டக்காரர்கள், நகரப் பிரதானிகள், பாங்கு பிரதம மானேஜர் முதலியோர்கள் காணப்படுகின்றனர்.]

அரசன்:—அமைச்சர்களே! வஞ்சம், லஞ்சம், பொய், சூது, கொலை முதலிய அநீதிகள் நமது நாட்டில் தலைகாட்ட வொட்டாது ஆட்சிபுரிய வேண்டுமென்பதே நமது லக்ஷியம். அப்படியே செய்து வருகிறோமெனினும் இப்போது ஓர் விபரீத கொலை நடந்துவிட்டதாக அறிந்து நாம் எல்லையிலா விசனமடைகிறோம். புத்த மத பிக்ஷுக்கள் நமது தேசத்தில் "அஹிம்ஸா பரமோதர்ம" என்ற கொள்கையைப் பிரசாரஞ்செய்து வருவதைக்கண்டு நாம் பரம சந்தோஷமடைந்து வருகின்றோம். அவர்களுக்கு ஆதிக்கம் கொடுத்தும் வந்தோம். அப்படியிருக்க ஓர் கொலை நடந்துவிட்டது. பிரதாபசேனனில் கொலைக்குற்றம் ஆரோபிக்கப்பட்ட இந்த ஸ்திரீக்கு என்ன தண்டனை கொடுக்க வேண்டுமென்று நீங்களே ஆலோசித்துச் சொல்லுங்கள். பொது ஜனங்களின் மனதை நோகவைக்காமல் ஆட்சி புரிவதே நமது ஆசை.

முதல் மந்திரி:—அரசே! நாட்டு மக்களின் க்ஷேமமொன்றிலேயே நாட்டங் கொண்டுழைக்கும் உத்தம பூபதியே! தங்களுடைய ஆட்சி காலத்தில் தலை நகரிலேயே இவ்வித பெரிய பாதகச் செயலுக்கு முற்றிலும் ஜவாப்தாரியான இந்த தாஸிக்கு கடுமையான தண்டனை அளிக்கப்பட வேண்டும். அப்படியானால்தான் இது ஓர் படிப்பினையாயிருக்கும் மற்றவர்களுக்கு.

அரசன்:—சாதாரணமாக ஆடவர்கள் கூட அஞ்சத்தக்க இந்த கொடுஞ்செயலை செய்த இப்பெண்ணின் நெஞ்சம் நஞ்சிலும் கொடியதே.

இரண்டாவது மந்திரி:—அரசே! எனக்கொரு சந்தேகம். இந்தப்பெண் கொலை செய்யாதிருந்தால் நாம் தண்டனை செய்வது பாதகமாய் விடும். ஆகவே, தீர்க்கமாய் ஆராய்ந்த பின்னரே எத்தகைய முடிவுக்கும் வரவேண்டும்.

மு. மந்திரி:—பண ஆசையினால் இந்தப் படுகொலை நடந்திருப்பதாகத் தெரிந்தாய்விட்டது. இந்த ஸ்திரீ வேசி. கொலை செய்யும்போது கூட இருந்து கண்டதாகவும், வாஸவதத்தாவினுடைய தோழிகளிலொருவளான கமலா கூறியிருக்கிறாள். மேலும் பிணம் அவளுடைய கொல்லைப்புறத்திலிருந்தே தோண்டி எடுக்கப்பட்டிருக்கிறது.

அரசன்:—ஏ! ஸ்திரீயே! உனது அபிப்பிராயமென்ன? (மௌனம்)

மு. மந்திரி:—பிரேதத்தை வைத்திய பரிசோதனை செய்து பார்த்ததில் நஞ்சிட்டுக் கொல்லப்பட்டதாகத் தெரிகிறது. பிரதாபனுக்கு வாஸவதத்தா விஷம் கலந்த பானம் கொடுத்ததாக கமலாவும், அழகண்ணன் செட்டியாரும் சாட்சியம் கூறியிருக்கிறார்கள். இதைத் தவிர வேறு என்ன வேண்டும்?

இ. மந்திரி:—இவள் கொலை செய்தாள் என்பதை வைத்துக்கொள்வோமென்றாலும், இச்செய்கைக்கு இப்பெண்ணை பிரேரேபித்தவர் ஒருவர் இருக்கலாமென்றும், அவர் அழகண்ணன் செட்டியாராகவே யிருக்கக்கூடுமென்றும் நான் அபிப்பிராயப்படுகிறேன். ஆகவே அவருக்கும் கடுமையான தண்டனை அளிக்கப்படல் வேண்டும்.

மு. மந்திரி:—நான் அதை ஒத்துக்கொள்கிறேன். பிரதாபனிடமிருந்த காசையெல்லாம் பிடுங்கிக் கொண்டு அவனை ஓட்டாண்டியாக்கியதும்

போதாமல், கடைசியில் அவனுடைய உயிரையும் பிடுங்கிக்கொண்டாள். இந்த அநியாயத்திற்கு...............

அரசன் :—செட்டியாரே! இந்தக் கொலையைப்பற்றி உமக்குத் தெரிந்ததை ஒளியாமல் நம்முன் சொல்லவேண்டும். ராஜ சந்நிதியில் பொய் சொன்னால்.....................

(செட்டியார் பதறுகிறார்)

செட்டியார் :—பிரபோ! எல்லாம் மந்திரியிடம் சொல்லிவிட்டேன். இந்தத் தாசியிடம் எனக்கும் கொஞ்சம் சிநேகமுண்டு. அன்றைக்கு விஷம் கொடுத்துக் கொன்றதும் தெரியும். நிசம்தான். என்னை மன்னித்தருளல் வேண்டும்.

அரசன் :—எல்லா விஷயங்களும் ருசுவாகிவிட்டன. கொலை செய்தவள் வாஸவதத்தாதானென்பது செட்டியார், கமலா ஆகியவர்களின் சாட்சியங்களிலிருந்து தெரிந்துவிட்டன. இதற்கு ஓர் அளவில் காரணமாயிருந்தவன் அழகண்ணன் செட்டி என்பதும் தெரிந்துவிட்டது. சொந்த மனைவியை ஒதுக்கி வைத்துவிட்டு கூத்தியாரை அணுகி பல அநீதிகள் செய்ய காரணமாயிருந்த செட்டியாருக்கும் தண்டனை யளிக்கவேண்டும். (செட்டியார் பதறுகிறார்) இவர்களுக்கு என்ன தண்டனை கொடுக்கவேண்டும்? நீங்களே கூறுங்கள்.

மு. மந்திரி :—இருவர்களையும் சித்திரவதை செய்ய வேண்டும். கொலைக்குற்றத்தை ஒருநாளும் தப்பவிடக்கூடாது. (எல்லோரும் சேர்ந்து ஒரே கூச்சலாக அப்படித்தான் செய்யவேண்டுமென்று கூறுகிறார்கள்.)

அரசன் :—கொலைக்குற்றம் செய்தவள் ஸ்திரீயாதலால் நான் சலுகைக்காட்ட கருதுகிறேன். இவளுடைய கைகால்களை சேதித்து ஸ்மசானத்தில் தள்ளி விடுங்கள். இந்த செட்டியாருக்கு மூன்று வருடம் சிறைத்தண்டனை விதிக்கிறேன் ஒவ்வொரு மாதமும் கடைசி வெள்ளிக்கிழமை தோறும் எல்லோரும் காணும்படியான முறையில் ஒரு டஜன் பிரம்படியும் இந்த பாதகனுக்கு முச்சந்தியில் கொடுக்கப்பட வேண்டும். (எல்லோரும் போகிறார்கள்.)

(திரை)

அங்கம் 5. காட்சி 2.

[இருகொலையாளிகள் வாஸவதத்தாவை தலைமயிரைப் பிடித்து இழுத்தவண்ணமாக மயானத்தில் பிரவேசிக்கிறார்கள்.]

மு. கொலையாளி :—போ, நடந்துபோ பிசாசே.

வாஸவதத்தா :—(சோர்ந்த நிலைமையில் தலையில் கை வைத்துக்கொண்டு கண்ணீர் வடித்த வண்ணமாகவே).........ஆ! தேவதேவனே! எனக்கு கடைசியில் இந்த கதியா நேரவேண்டும்? ஆம்—இவ்வளவும் இந்த பாதகிக்கு போதாது. அநித்தியமான அற்ப சுகத்தையும், நிலையிலா செல்வத்தையும் ஆசைப்பட்டு அடாத அநியாயச் செயல்கள் புரிந்த இந்த ராக்ஷஸிக்கு இவ்வளவா—ஏ, பராசக்தி! நான் மார்க்கம் தவறி கெட்டுப் போனேன்! பேரானந்தப் பெரும்பதவியை அளிக்கும் பரமபிதாவின் தேஜோமயானந்த வொளியை அறிந்து கொள்வதற்கு பாடுபடாது வீணே காலம்கடத்திய கொடும்பாவி நான்—படுபாவி என்ன என்ன கொடுமைகள்—ஐயோ நினைக்கவும் கூடுதில்லையே! அநியாயங்கள் செய்தேன். (தன்னைப்பார்த்து) அடி பாதகி, சகடக்கால்போல மாறிமாறிப் போய்க்கொண்டேயிருக்கும் நிலையிலா செல்வத்தை விரும்பி எத்தனை பேர்களை நீ ஏமாற்றினாய். உனக்கு ஈசன் தந்த அழகை இதற்காகவன்றோ பயன்படுத்தினாய். ஐயோ—எனது — கடைசிக் காலத்திலாவது..........................கருணாகரா! என்னை மன்னிப்பாயா! இதொன்றே எனது கடைசி ஆசை. (கைகூப்பி நமஸ்கரிக்கிறாள்) எனது சகல சுகபோகங்களையும் இதோ இங்கு தள்ளிவிட்டுப் போகிறேன்—ஆனால்—ஐயோ—என்னால் எண்ண முடியவில்லையே—எனது பாவமூட்டையை சுமந்துகொண்டு போகிறேன்—ஹா—ஒரு குற்றமும் செய்தறியாத—ஆம்—என்மீது அளவிலா மோஹம் கொண்டு என்னால் மயக்கப்பட்ட அந்த சுத்தான்மா பிரதாபசேனனை அவருடைய சகல சம்பத்தையும் பிடுங்கிவிட்டு—கடைசியில் (விம்மி அழுகிறாள்) இந்த கைகளினாலேயே—ஆம்—அவருடன் பணம் வாங்கின இந்தக் கைகளினாலேயே அவரை மார்போடு அணைத்த இந்த கைகளினாலேயே வஞ்சகமாக நஞ்சையூட்டினேன். கொலை செய்தேன். ஹா........நான் கொலைபாதகி, பரமசண்டாளி! செட்டியார்—நீயும் எனக்கு வேண்டாம், உனது வைர நகைகள்—ஆம்—இதோ எடுத்துக்கொள் (நகைகளையெல்லாம் கழற்றி எறிகிறாள். பின்னும் மெள்ளத் தள்ளாடித் தள்ளாடி நடந்துகொண்டே) ஹா............அதோ வருகின்றான் என் ஆசை மணவாளன் கோமளரூபன். ஆராதனைமூர்த்தி........வாருங்கள். என் சமீபத்தில் உட்காருங்கள். உங்களைக் காணாமல் என் மனம் என்ன பாடுபடுகிறது! எனக்கு எந்தவித துன்பங்கள் நேர்ந்த போதிலும் உங்களது தர்சன மாத்திரத்தில் அவையெல்லாம் பறந்தோடிப் போய் விடுகின்றன. ஸ்வாமி, உமது பரமபவித்ரமான கரங்கள் இந்த ராக்ஷஸிமீது படுமானால் நான் நிச்சயமாகவும் கடைத்தேறுவேன். (கைகளை நீட்டிய வண்ணமாகவே) ஹா........உத்தமா, உபகுப்த முனியே! அடியாள் நமஸ்கரிக்கிறேன்



நான்....நான்....அனாதை. ஸ்வாமி தாங்களே தஞ்சம்.

கொலையாளி :—அடி என்ன ஜாலம் பண்றே (பிடித்துத் தள்ளுகிறான்) கொலைகாரி—ஜாலக்காரி.

இ. கொலையாளி :—ஏ அண்ணே! அவள் சாகத்தானே போகிறாள். சொல்ல வேண்டியதெல்லாம் சொல்லித்தொலையட்டுமே. கொஞ்ச நாழிகையிலே கண்ணையும் குத்தி காலையும் கையையும் வெட்டி வதைச் செய்யத்தானே போகிறோம். சங்கடத்தை யெல்லாம் சொல்லித்தொலையம்மா........எப்படியிருந்தாய் நீ. பாவம்.

வாஸவதத்தா :—(இரு கண்களிலும் நீர் ததும்புகிறது) ஏ, பிரபஞ்சமே' மாய வாழ்க்கையே, இதோ உன்னைவிட்டுப் பிரிகிறேன். நான் கொலைகாரி என்பது சத்தியம். இச்செய்கைக்கு மூலகாரணமா யிருந்தவை காசும் காமப் பைத்தியமுமேயாம். சாவதைக் குறித்து நான் கவலைப்படவில்லை. எனது கடைசிக் காலத்தில் பெண் உலகிற்கே ஓர் வேண்டுகோள். சகோதரிகளே, ஒழுக்கத்தை ஒருபொழுதும் நீங்கள் தவறவிடக்கூடாது. மனம்போன போக்கெல்லாம் போகவேண்டாமென்ற மகத் வாக்கியத்தை அநுசரிப்பதே மாதர்களின் இன்றியமையாத கடமையும் உரிமையுமாகும். இந்த பிரபஞ்சத்தில் பெண்கள் சக்தி உருவங்கள். ஒழுக்கம் தவறாத பெண்களால் எவ்வளவோ அரிய பெரிய காரியங்களை நிர்வகிக்கமுடியும். சாவித்திரி பிறந்த நாட்டிலே நாம் பிறந்தோம்; தமயந்தி அவதரித்த பாரத தேசத்தில் நாம் அவதரித்தோம். ஸீதை தோன்றிய மண்ணில் நாம் தோன்றினோம் என்ற உணர்ச்சி நமக்கிருக்கவேண்டும். ஆண்களை வெகு எளிதில் பெண்களால் திருத்தமுடியும். உலக முன்னேற்றத்திற்கு பெண் உலகமே அடிப்படைக்கல். சன்மார்க்கத்திலீடுபட்டு சர்வமத சமரசமான அன்பொன்றையே தலைமேற்கொண்டுழைத்தால் பெண் உலகமும் அதனால் உலகமும் உயர்ந்துவிடும். பெண் என்பது சக்தி, ஜீவன். ஆனால் இந்த ஜீவ சக்தியை நல்ல வழியில் ஈடுபடுத்த வேண்டும்...............நான் பரமசண்டாளியாய் விட்டேன். அதற்கான தண்டனையுமடைந்து விட்டேன். எனது வாழ்க்கை பெண் உலகிற்கு ஓர் படிப்பினை. தெய்வமே, இந்த மகாபாபியை—கோர ராக்ஷஸியை மன்னித்தருள்க. ஐயோ........(மூர்ச்சித்து விடுகிறாள்.)

கொலையாளி :—அண்ணே, நம்ம வேலையை பார்ப்போம். நல்ல வேளை மூர்ச்சையாயிருக்க.....

இ. கொலையாளி :—பொம்பிளையாச்சே.

(இரு கைகள் வெட்டப்பட்டன; கண் குத்தப்பட்டது.)

வாஸவதத்தா :—ஹா........ஐயோ....

(திரை)

அங்கம் 5. காட்சி 3.

இடம் : மயானம்.

காலம் : காலை.

[வாஸவதத்தா, கைகால்கள் துண்டிக்கப்பட்டு கண்கள் குத்தப்பட்டு நிலத்தில் ரத்தப்படுக்கையில் படுத்திருக்கிறாள். விரூபமாகி அவதிப்படும் வாஸவதத்தாவுக்கு சகாயமாயிருந்து காகம், கழுகு முதலிய பறவைகள் அவள்மீது வராமல் விரட்டிக்கொண்டு தாங்க முடியாத விசனத்துடன் சரளா பக்கத்தில் தலைவிரிகோலமாக அழுதுகொண்டேயிருக்கிறாள்.]

சரளா :—ஹா பிரபஞ்சமே! உலக இன்பங்கள் எல்லாம் நிலையற்றவை யென்பதை இப்போது நிதர்சனமாகக் கண்டுகொண்டேன். உலகமே ஓர் நாடகமேடை. இன்றைக்கிருப்பாரை நாளைக்கிருப்பரென்று எண்ணவோ இடமில்லை. உலக யின்பங்களை இன்றைக்கு ஒருங்கே அநுபவித்தவர், மறுநாள் பரம தரித்திரராகப் போய்விடுகின்றார்களே! ஐயோ! ஆனந்தவாரிதியில் சகலவித சுகபோகங்களையும் இதுகாறும் அநுபவித்துவந்த வாஸவதத்தாவின் தற்போதிய நிலை.........ஹா........(மடமடவென்று அழுகிறாள்; பெருமூச்சு விடுகிறாள்.) புஷ்ப மெத்தையில் சயனித்த அவளது பூமேனி, இப்போது—ஐயோ! சுடுகாட்டில் புழுதியில் கிடக்கின்றதே. ஜகதீசா! இதுவும் உன் சோதனையா? அம்மா! தங்களுக்கு இந்த கதியா நேரவேண்டும்? (தலையிலடித்துக்கொள்கிறாள்.)

வாஸவதத்தா :—சரளா! (கையை நீட்டித் தடவுகிறாள்) ஐயோ, என்னால் சகிக்க முடியவில்லையே. அடி நான் என்ன செய்வேன்! நீ என்னை கொன்றுவிடு. இந்த துன்பங்களை சகிப்பதை விட சாவதே மேல். ஐயோ...............

(உபகுப்த முனிவனின் பிரவேசம்.

உபகுப்தன் :—(சுடுகாட்டைப்பற்றி ஓர் பாட்டு பாடிக்கொண்டே வருகிறார்) ஆம். சந்தேகமில்லை. அதோ கழுகுக் கூட்டங்கள் ஆகாயத்தில் வட்டமிடுகின்றன. நரிகள் ஊளையிடுகின்றன. சுடுகாடு என்பது பிரபஞ்ச மாயாஜாலத்தின் ஓர் பக்கம். ஹா! துர்க்கந்தக் காற்று மூக்கைத் துளைக்கிறதே. (அதிவேகமாய் நடந்துபோன உபகுப்தன் திடீரென திகைத்து நிற்கிறான். ஆகாயத்தை நோக்கி தியானம் செய்கிறான்)—புத்தம் சரணம் கச்சாமி. ஆச்சரியத்துடன் அப்படியே அசையாது நிற்கிறான்) ஆஹா—அதோ ஓர் பெண்மணி தவித்து அழுகிறாளே—அதோ—ஆம், ஐயோ அவள்தான் அன்று வாஸவதத்தாவுக்கு துணைவியாக வந்த அபலை. நட்பின் மேன்மைக்கு ஓர் எடுத்துக்காட்டு—உத்தம சிநேகிதை. எஜமாட்டிக்கு இடுக்கண் வந்த வேளையில் உதவி செய்

யும் உத்தம ஸ்திரீ. (உபகுப்தன் சமீபத்தில் போகிறார்.) சகோதரி, நீ இங்கு ஏன் இப்படி அழுது புலம்பிக் கொண்டிருக்கிறாய்? அது என்ன?

சரளா :—ஸ்வாமி! சர்வம் மங்களம்.

உபகுப்தன் :—ஹா! எனது உத்தம பக்தை வாஸவதத்தா. இந்தக் கோலத்துடன் இருப்பதற்கு ஏது என்ன! விபரீதமாயிருக்கிறதே. வாழ்க்கையின் மர்மமா.....................

[வாஸவதத்தாவின் கண்களிலிருந்து இரத்தம் கலந்த நீர் பெருகிற்று. தனது வஸ்திரத்தை சரியாக மூடுவதற்கு சரளாவோடு சைகை செய்கிறாள்.]

உபகுப்தன் :—ஹா! இந்த ஸ்திரீ இம்மாதிரியான நிலைமையிலும் தனது மானத்தை மறைக்க முயற்சிக்கிறாள். ஆம்—பெண்களுக்கு அமைந்த இயற்கையான குணம். மாயா வர்ணமான மக்கள் தனது சரீரம், மாயையினால் அமைக்கப்பட்ட வெறும் கூடு என்பதை மறந்துவிடுகிறார்கள். மனித சரீரம் மண்ணாவது திண்ணம். ஆனால் அதற்காக சரீரத்தைப் போற்றாமலிருப்பதும் மடமை. உடலை உறுதி செய்து வைத்துக்கொள்வதோடு, எவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகவேண்டும். அம்மணீ! வாஸவதத்தா, (அன்புடன் அவளை நோக்கியவண்ணமாகவே) நீ வெகுகாலமாக தரிசிக்கவேண்டுமென்று காத்துக்கொண்டிருந்த உபகுப்தன் இதோ உன்முன் வந்து நிற்கிறான். இதோ அவன் ஆணைப்படியே வலுவிலேயே உன்னை நாடி வந்து விட்டான். உனக்கு அவனைக்கொண்டு என்ன சாதிக்கவேண்டுமென்பதைத் தெரிவி. செய்யத் தயாராகக் காத்துக் கொண்டிருக்கிறான்.

வாஸவதத்தா :—ஸ்வாமி, தங்களை அழைத்த வாஸவதத்தா இங்கில்லை. அவள் வேறு.

உபகுப்தன் :—அம்மணீ! கோபம் கொள்ள வேண்டாம். தாங்கள் விரும்பியதைவிட எவ்வளவோ உயர்ந்த இன்பத்தை அளிப்பதற்கென இதே உபகுப்தன் காத்து நிற்கிறான்.

வாஸவதத்தா :—(தாழ்ந்த ஸ்வரத்தில்)........ஹே! புருஷோத்தமா! நமஸ்கரிக்கிறேன். உலக இன்பங்களையெல்லாம் ஒருங்கே யனுபவித்து உல்லாசமாயிருக்கும் வேளையில் தங்களுடைய உறவை நான் பெரிதும் நாடினேன். அதற்காக அல்லும் பகலும் அனவரதமும் பாடுபட்டேன். தங்களுக்காகவே உயிர் வாழுகிறேன் என்று நினைத்து நினைத்து தவித்தேன். ஆனால் அப்போது "சமயமாகவில்லை" என்று என்னை தள்ளிவிட்டீர்கள். இப்போது என் நிலைமையை என்னாலேயே நம்பமுடியவில்லை.—என் அழகெல்லாம் அழிந்து—இல்லை—அழிக்கப்பட்டு கைகால்கள் சேதிக்கப்பட்டு கோரஸ்வரூபியாய் விட்டேன். தங்களைப் பார்க்கக்கூட எனக்கு கண்ணில்லாமற் போய்விட்டது. ஸ்வாமி! தங்கள் மீதுள்ள என்னுடைய கள்ளம் கபடமற்ற பிரேமையை மட்டும் ஒருபோதும் என்னால் மறைக்கவோ மறக்கவோ முடியாது.

உபகுப்தன் :—நல்லாய்! உன்னுடைய பிரேமை அதிவிசாலமானது, மகத்தானது. அதற்காக நான் பெரிதும் சந்தோஷப்படுகிறேன். உனது மேலான பிரேமையை நான் கடுகளவும் ஆட்சேபிக்கவில்லை; ஆட்சேபிக்கவும் முடியாது. ஒரு வார்த்தை. நீ விரும்பும் இன்பத்தில் களியாட என் மனம் இசையாது. உன் பிரேமையில் பங்கு கொள்ளவும் முடியாது. ஸ்திரீ பிரேமையென்பதற்கே எனது இதயத்தில் அணுவளவும் இடமில்லை. உன்னுடைய விருப்பத்தைவிட, உனது அதிரூப சௌந்தரியத்தைவிட சதகோடிப் பங்கு மேலான—ஒரு நாளும் அழிவில்லாத—அபூர்வவஸ்துவை அளிப்பதற்காக நான் இப்போது உன்னை நாடி வந்திருக்கிறேன். எனது பிரிய சகோதரி! சகோதரி என்ற முறையில் உன்னை ஒருமுறை தழுவ இதோ என் கைகள் ஆசைப்படுகின்றன.

வாஸவதத்தா :—ஹே! உத்தமகுணசீலா! சகோதரி என்ற முறையில் என்னைத் தழுவ சம்மதியேன். தங்களைக் கண்ட நிமிஷம் முதல் என் இதயத்தில் வளர்ந்த காதலுக்கு இதுவா பரிசு! சபாஷ். பிரபஞ்சமே! காதலுக்கு கதியில்லையா? காதலுக்கு வெற்றியில்லையா? காதல்—காதல்—இன்றேல்—சாதல் நலம். ஸ்வாமி! என்னை ஏற்றுக்கொண்டதாக ஒரு வார்த்தைச் சொல்லுங்கள். எனது அந்திய வேளையில் எனது பிராணன் நிம்மதியாகப் பிரியட்டும். ஐயோ, சகிக்க முடியவில்லையே. வேண்டாம். நீங்கள் ஏன் வந்தீர்கள்? போங்கள். போங்கள்........





உபகுப்தன் :—வாஸவதத்தா, நிலையில்லாத அற்ப சுகத்தின்மீதா உன் மனம் ஈடுபடுகிறது! வேண்டாம்; வேண்டாம். அன்று உனக்கு இயற்கையாயமைந்த அழகைப் பாழ்படுத்திக்கொண்டாய். உன்னுடைய அதிரூப சௌந்தரியத்தில் கர்வம் கொண்டு கண்டபடி நடந்துவிட்டாய். இப்பொழுது மாயப்பிரபஞ்ச வாழ்க்கையின் மர்மத்தை நீ அறிந்திருக்கக்கூடுமென்று நான் கருதுகிறேன். உன்னுடைய கடைசிக் காலத்திலேனும் உண்மையை உணர்த்துவதற்கே நான் உன்னை நாடி வந்திருக்கிறேன். ஆகவே, சகோதரி சென்றவைப் பற்றி நினைத்து வருந்தாதே. சாந்தம் கொள். ஸ்ரீ புத்தம் சரணம்.

வாஸவதத்தா :—(மெதுவாக) புத்தம் சரணம்.

உபகுப்தன் :—சகோதரி, உன்னுடைய உத்தமத் தோழியை நான் மிகவும் பாராட்டுகிறேன். உன் மீது உண்மையான நேசங்கொண்டு நடக்கும் உத்தம பாங்கி. உன்னுடைய சுகதுக்கங்களை தனக்கு ஏற்பட்டவையென்று எண்ணி வருந்தும் தியாகசீலம் அமைந்தவள். உங்களிருவரையும் நாம் பரிபூர்ணமாக ஆசிர்வதிக்கிறோம்.

வாஸவதத்தா :—ஸ்வாமி! தாங்களே எனக்கு தெய்வம். எனக்குத் தங்களையன்றி இவ்வுலகிலும் வேறு எவ்வுலகிலும் தஞ்சம் இல்லை. இந்த நரகவேதனையிலிருந்து விரைவில் என்னைப் பயனைப்படுத்துங்கள். (நமஸ்கரிக்கிறாள்)

உபகுப்தன் :—(வாஸவதத்தாவின் சமீபத்தில் சென்றிருந்துகொண்டு) அம்மணி! உன்னுடைய வேதனைகளை நீக்குவதற்கு இதோ எனது கரங்களால் உனது சரீரத்தை தடவுகிறேன். (வாஸவதத்தாவின் சரீரத்தை மெள்ளத் தடவிக்கொண்டு உலக வாழ்க்கையின் நிலையில்லாமைக் குறித்தும், அன்பின் மகோன்னத நிலைமையைப்பற்றியும் ஓர் பாட்டு பாடுகிறார்) சாந்தி! சாந்தி!! சாந்தி!!! புத்தம் சரணம்.

சரளா :—(உபகுப்த முனிவரின் பாதங்களில் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து) ஸ்வாமி, தங்களுடைய பரமபவித்திரமான மாகாத்மியத்தால் எங்களிருவருக்கும் பேரானந்தப்பதவியை அளித்துவிட்டீர்கள். ஆனால் என்னுடைய எஜமாட்டியுடன் அடியாளையும் இகலோக வாழ்க்கையை நீக்க அருள் புரியவேண்டும். இந்தப் பேய், நாயினும் கடையர் நாரிகள் தங்களையறியாது அனுவசியமாக தொந்தரவு செய்ததை மன்னித்தேன் என்று ஒரு வார்த்தைச் சொல்லுங்கள். கெட்ட மதியால் எங்களுக்கும் கேடு செய்தோம்; பிறரையும் கெடுத்தோம். கண்ணிருந்தும் நாங்கள் காணுந்திறமையற்ற கடையர்கள். மதங்கொண்டு கொடுமைகளைக் கூசாது நித்தமும் செய்துவந்த எங்களுக்கு—ஆம் இந்த கொடியவர்களுக்கு—ஞானவொளியை நல்கிய புனிதமூர்த்தியே அடியாளை மன்னித்தருளுங்கள். ஸ்வாமி, தங்களையறிந்து கொள்ளாது நாங்கள் செய்த தொந்திரவுகளை நினைக்கையிலேயே என் சித்தம் பித்துப்பிடிக்கிறது.



உபகுப்தன் :—இல்லை. சகோதரி, ஒருநாளுமில்லை எனக்கு எவராலும், எந்தக் காலத்திலும் தொந்திரவு செய்ய இயலாது. இன்பதுன்பங்களை சமமாகவே புத்தமத பிக்ஷுக்கள் மதிப்பார்கள். என்மீது கொண்ட அதீத பக்தியினாலேயே, நீங்களிருவர்களும் என்னைத் தொந்திரவு செய்ததாகக் கருதுகிறீர்கள். சகோதரி, பக்தியின் ஒரு பகுதியே காதலென்பது. காதலைப் பக்தியாக மாற்றிவிட்டால், எவ்வளவோ பெரிய காரியங்கள் எளிதில் கைகூடும். இன்று உன்னுடைய எஜமாட்டியும், என்னுடைய பரம பக்தையுமான வாஸவதத்தா அப்படியே செய்திருக்கிறாள். கவலை யடையாதீர்கள். புத்தம் சரணம்.

வாஸவதத்தா :—ஸ்ரீ புத்தம் சரணம்.

உபகுப்தன் :—அம்மணி! உன்னுடைய உற்ற சிநேகிதையான ஸரளாவை நான் வெகுவாகப் பாராட்டுகிறேன். இவள் மகாஉத்தமி என்பதில் எள்ளளவும் ஆட்சேபனையில்லை. உங்களிருவரையும் நான் பரிபூர்ணமாக ஆசிர்வதிக்க ஏற்றதருணமிதுவே. அதனாலேயே தக்ககாலமானதும் வலுவில் வந்தேன். சகோதரி, ஸரளாவை சிறிதுகாலம் ஸ்ரீ புத்தபகவானின் அன்புமதத்தை உலகமக்களுக்கு உபதேசிக்க நான் புத்தமதபிக்ஷுவாக அனுப்ப எண்ணியுள்ளேன். மாயாப்பிரபஞ்ச வாழ்க்கையை சதமென்று மதித்து மதிமயங்கித் தவிக்கும் மக்களை கரையேற்றும் மருந்தாகிய புத்த மதப் பொக்கிஷத்தைப் பலவிடங்களிலும் கொண்டு சொரிந்து, நற்பயன் அடைய ஏற்பாடு செய்கிறேன். சகோதரி, பேரானந்தப் பதவிப் பெறுவாயாக! புத்தம் சரணம் கச்சாமி, தர்மம் சரணம் கச்சாமி, சங்கம் சரணம் கச்சாமி.

சரளா :—புத்தம் சரணம் கச்சாமி.

வாஸ :—புத்தம் சரணம் கச்சாமி.

(உபகுப்தன் ஆசிர்வாதம் செய்கிறார்.)

(திரை)

முற்றிற்று.



## திருப்பத்தூர்
### ஸ்ரீநாகப்ப பிள்ளை மறைவு

திருப்பத்தூர், 22-12-37

இவ்வூர் நாகப்ப மருதப்ப ஆரம்பக்கலாசாலை மானேஜர் திருவாளர் நா. ம. நா. நாகப்ப பிள்ளையவர்கள் 21-12-37 இரவு 7 மணிக்கு இவ்வுலக வாழ்வை விட்டு நீங்கினர். அன்னார் இவ்வூர் பிரமுகர்களில் ஒருவர். தமது தேசங்களில் லேவாதேவி செய்து வந்தார். இக்கலாசாலையை 25 வருஷங்களுக்கு முன்னேயே ஸ்தாபித்து நடத்துபவர். அவர்கள் அநேகவகை தர்மங்களும் நடத்தி வித்தியாதானமும் நடத்திவந்தவர். இந்நாட்டில் அவர் தர்மங்களைக்கண்டு புகழ்ந்துரையாதார் கிடையாது. அவர் தமது 67 வது வயதில் தன் மூன்று குமாரர்களையும், இருகுமாரத்திகளையும் தனது வயது சென்ற மனைவியையும் எண்ணற்ற பந்துக்களையும் சிநேகிதர்களையும் விட்டுசென்றது பந்துக்களுக்கும், ஊராருக்கும் மிகவருந்தத் தக்கதும், கஷ்டமானது மாகும்.

அவர் உயிர் நீத்தார் எனக் கேள்விப்பட்டது முதல் ஜனங்கள் திரள் திரளாக, தங்கள் துக்கத்தைத் தெரிவிக்க அவர் வீட்டில் கூடிவிட்டனர்.

அவர் இறந்ததற்காகக் கலாசாலை இன்று மூடப்பட்டது.

உற்றாரும், ஊராரும், கலாசாலை ஆசிரியர்களும், தோழர்களும், கூடியிருக்க அவர்தேகம் எடுக்கப்பட்டு அவர்களுடைய சொந்த இடத்தில் அடக்கம் செய்யப்பட்டது.

அவர்களுடைய பூத உடல் அழிந்தபோதிலும் புகழ் உடல் அழியாமல் இருக்கும்படி தர்மங்கள் செய்துள்ளது குறிப்பிடத்தக்கது.

## மலாக்காவில்
### பிரிவுபசார விருந்து

மலாக்கா செட்டியார் சங்கத் தலைவராயிருந்து நாப்பாடு செல்லும் திருவாளர் க. வீ. அழ. மு. அருணாசலம் செட்டியாரவர்களுக்கு சங்கச் சார்பில் 15-12-37 மாலை 4 மணிக்கு பொய்யாத விநாயகர் கோவிலில் ஓர் தேநீர் விருந்து நடைபெற்றது.

விருந்து முடிந்ததும், ப. சி. லெ. அண்ணாமலை செட்டியார் தலைமையில் கா. ச. அ. அ. சம்பந்தம் செட்டியார், தமிழறம்பேணும் தலைமையாளர் உ. அரு. அருணாசலம் செட்டியார், ராம. அழ. சித. சிதம்பரஞ் செட்டியார் முதலியோர் தலைவரின் தொண்டைப்பற்றிப் பேசினார்கள். மாணவர்கள் செ. காசி. லெ. காசி ஜவகர், காந்தி என்பதுபற்றி பேசினார்கள். திரு. கவி. அழ. மு. அருணாசலம் செட்டியார் சங்க நிலயத்திற்குப் புத்தகம் வாங்கிக்கொள்வதற்காக 25 வெள்ளி நன்கொடை யளித்தார்.

## சொக்கலிங்கம்புதூர்
### பல நல்ல தீர்மானங்கள்

இவ்வூரில் 25—12—37உ காலை 9–30 மணிக்கு திரு. அழ. ராம. சிதம்பரஞ்செட்டியாரவர்கள் தலைமையில் கிராமக் காங்கிரஸ் சபை கூடிற்று. அதில் கீழ்க்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேறின:—

(1) மஹாத்மா காந்தியடிகள் விரைவில் பூரண சுகம் பெற்று நீடூழி வாழ எல்லாம் வல்ல இறைவனை இக் கூட்டம் பிரார்த்திக்கின்றது.

(2) விஞ்ஞான நிபுணர் ஸ்ரீ ஜே. ஸி. போஸ் மரணத்திற்கு வருந்துகின்றது.

(3) விவசாயிகளின் கடன் நிவாரண மசோதாவை முழுமனதுடன் ஆதரிப்பதோடு அதை உடனே நிறைவேற்றிவைக்க மந்திரி சபையைக் கேட்டுக் கொள்கிறது.

(4) நீல் சிலையை அப்புறப்படுத்தியதற்கு காங்கிரஸ் மந்திரி சபையைப் பாராட்டுகின்றது.

(5) தீண்டாமையை ஒழித்து ஹரிஜனங்கள் ஆலயங்களில் பிரவேசஞ் செய்ய சட்டம் இயற்றி உடனே அமுலுக்குக் கொண்டு வரவேண்டுமாய் மந்திரி சபையைக் கேட்டுக் கொள்கிறது.

(6) சர்க்கார் உத்தியோகங்களில் இனி காலியாகும் எந்த ஸ்தானத்திற்கும் இந்தியரையே நியமிக்க வேண்டுமெனச் சர்க்காரைக்கேட்டுக் கொள்கிறது.

(7) வத்தலக்குண்டில் நடைபெறவிருக்கும் தமிழ் மாகாண மகாநாட்டிற்கு பிரதிநிதியாக பழ. நாராயணன் அவர்களைத் தேர்ந்தெடுக்கப் பெற்றிருக்கிறது.

## ரயில் போக்கு வரவு

### மதுரை-எழும்பூர்
#### மெயின் லைன்

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| | மாலை | காலை |
| இண்டோ-ஸிலோன் எக்ஸ்பிரஸ் .... | 9 0 | 6 35 |
| | காலை | மாலை |
| செங்கோட்டை பாஸஞ்சர் .... | 7 30 | 7 00 |
| | மாலை | காலை |
| கூடலூர் பாஸஞ்சர் .... | 4 00 | 10 55 |
| | மாலை | காலை |
| திருவனந்தபுரம் பாண்டு பாஸஞ்சர் .... | 9 30 | 6 00 |
| | மாலை | காலை |
| திருச்சி பார்சல் .... | 10 25 | 5 15 |
| **கார்டு லைன்** | | |
| | காலை | மாலை |
| தனுஷ்கோடி பாண்டு பாஸஞ்சர் .... | 11 35 | 2 40 |
| | மாலை | காலை |
| திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் .... | 8 5 | 7 15 |

### மதராஸ்—சென்ட்ரல்

| வண்டிப் பெயர் | புறப்படும் நேரம் | வரும் நேரம் |
|---|---|---|
| | மாலை | காலை |
| கல்கத்தா மெயில் | 8 30 | 8 00 |
| | காலை | மாலை |
| கிராண்டு டிரங்க் எக்ஸ்பிரஸ் .... | 7 55 | 5 10 |
| | மாலை | காலை |
| பம்பாய் மெயில் | 9 00 | 5 55 |
| | காலை | மாலை |
| பம்பாய் எக்ஸ்பிரஸ் .... | 8 45 | 4 55 |
| | மாலை | காலை |
| பங்களூர் மெயில் .... | 9 30 | 6 10 |
| | மாலை | காலை |
| „ எக்ஸ்பிரஸ் .... | 1 0 | 2 00 |
| | காலை | மாலை |
| „ பாஸஞ்சர் .... | 6 30 | 7 45 |
| | மாலை | காலை |
| „ „ .... | 9 40 | 5 30 |
| | மாலை | காலை |
| ஜோலார்ப்பேட்டை பாஸஞ்சர் .... | 1 5 | 1 45 |
| | மாலை | காலை |
| அரக்கோணம் பாஸஞ்சர் .... | 6 30 | — |
| காட்பாடி பாஸஞ்சர் .... | 5 30 | 9 45 |
| | | காலை |
| மலபார் எக்ஸ்பிரஸ் .... | 8 5 | 7 20 |
| புதுமெயின்டன் எக்ஸ்பிரஸ் .... | 9 15 | 5 30 |



## 'கிசான்' பிரச்னை ஆராயப்படுகிறது

### அறந்தாங்கி காங்கிரஸ் கமிட்டி தீர்மானம்

அறந்தாங்கி, டிசம். 25.

இவ்வூர் தாலுகா காங்கிரஸ் கமிட்டியின் சாதாரணக் கூட்டம் இரவு 7 மணிக்கு காங்கிரஸ் மாளிகையில் உபதலைவர் ஜனாப் இ. கா. மு. அப்துல் ஹமீது ரவுத்தர் அவர்கள் தலைமையில் நடைபெற்றது. 28-12-37-ல் நடைபெறவிருக்கும் 3-வது அரசியல் மகாநாட்டிற்கு 25 பிரதிநிதிகள் தேர்ந்தெடுக்கப்பட்டார்கள். தலைவர் சொந்த ஜோலியின் காரணமாக மூன்று மாதம் லீவு கோரியிருந்ததை அனுமதித்து தலைவர் பார்க்கவேண்டிய கமிட்டியின் பொறுப்புள்ள வேலைகளை உபதலைவர் பொறுப்புடன் பார்த்து வரவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. கீழ்க்கண்ட தீர்மானம் வே. சங்கரன் பிள்ளை அவர்களால் கொண்டுவரப்பட்டு ஏ. நடராஜன் அவர்களால் ஆமோதிக்கப்பட்டு நீண்டநேர விவாதத்திற்கு பின் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது:—

பீஹார் கிஸான் சபைத் தகராறு பற்றி 22-12-37-க் தேதி ஸ்ரீ சத்தியமூர்த்தி விடுத்திருக்கும் அறிக்கையில் பிரபல காங்கிரஸ்காரர்கள், கிஸான் சபைகள், சோஷியலிஸ்ட்டு கட்சிகள், தொழிலாளர் சங்கங்கள் முதலியவைகளில் கலந்து கொண்டதால் காங்கிரசின் பலம் குன்றத்தான் செய்கிறதென்ற அபிப்பிராயத்தையும், அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி சட்ட சபைகள், ஸ்தல ஸ்தாபனம் முதலியவைகளில் இருக்கும் காங்கிரஸ் மெம்பர்கள் அரசியல் ஸ்தாபனங்கள் சம்பந்தம் வைத்துக் கொள்ளக்கூடாதென்று ஒருவிதி செய்ய வேண்டுமென்று கூறுவதையும் கண்டு இக்கூட்டம் பிரமிப்படைவதுடன் அவ்விதி ஏற்படுவதால், ஏகாதிபத்ய எதிர்ப்பு மூலை மழுங்கி, க்ஷீண தசையை அடைய நேரிடுமென்று இக்கூட்டம் கருதுகிறது.

## இளைஞர்கள் இறகு பந்துக் கழகம்

### இரண்டாவது ஆண்டு நிறைவு விழா

12-12-37-க் தேதி மாலை 3–30 மணிக்கு சிங்கப்பூர் நகரத்தார் கோயில் கார்த்திகைக்கட்டில் ஆரம்பிக்கப்பட்டு நடந்துவரும் "இளைஞர்கள் இறகு பந்துக் கழகம்" இரண்டாவது ஆண்டு நிறைவு விழாக் கொண்டாட்டம் இவ்வூர் "முன்னேற்றம்" மாஜி ஆசிரியர் உயர் திருவாளர் ஆர். இராமநாதன் அவர்கள் தலைமையில் தேசியக்கொடி வானமளாவ, தேசிய கீதங்கள் முழங்க, தலைவர்கள் படங்கள் திகழ ஆரம்பித்து வைக்கப்பட்டது. நிகழ்ச்சி முறைப்படி சிற்றுண்டி, புகைப்பட மெடுத்தல் முடிந்ததும் விழா மீண்டும் ஆரம்பமானது. இவ்வூர் "மீனாக்ஷியா ஸ்போர்ட்டிங் அசோஸியேஷன்" அங்கத்தினர்களால் ஓர் வாழ்த்துப்பாவும் திரு. சிங்கை ச. கணபதி அவர்களால் ஓர் வாழ்த்துக் கவியும் பாடப்பெற்றதும், தலைவரவர்கள் முகவுரை பகர்ந்தார்கள். பின்னர் பலர் பேசினர் சங்க அங்கத்தினர்களுக்குள் நடந்த இறகு பந்து விளையாட்டுப் போட்டியில் வெற்றிபெற்ற திரு. ஆவி. பழனியப்பனவர்களுக்குச் சங்கத்தின் வெள்ளிக்கப் அளிக்கப்பட்டது.

## இந்தோசைனா நாட்டுக்கோட்டை செட்டியார்கள் சங்கம்

12-12-37-க் தேதி ஞாயிற்றுக்கிழமை செய்கோன் இந்தோசைனா செட்டியார்கள் சங்க நிலயத்தில் ஏழாவது ஆண்டு பதினோராவது நிர்வாக சபைக் கூட்டம் தலைவர் திரு. மு. ராம. அ. சோமசுந்திரம் செட்டியார் அவர்கள் தலைமையில் நடந்தது. 12 மெம்பர்கள் விஜயம் செய்திருந்தனர். இந்தோசைனா வெள்ளக் கஷ்ட நிவாரண நிதிக்காக சங்கத்து பேரால் முனிசிப்பல் தியேட்டரில் நடத்தின டம்பாச்சாரி நாடகத்தில் வசூலான ரிங்கி 225/80 உடன் சங்கத்திலிருந்து ரிங்கி 74/20 நன்கொடையாக சேர்த்து, 300 ரை மேற்படி நிதிக்கு கொடுக்கிறதென தீர்மானிக்கப்பெற்றது.



திருச்சி நாரணேஷன் பிலிம்சாரின் 'என் காதலி'யில் ஒரு சீன்.

# ஒரே நிலத்தில் 6 வருடம் பயிரிட்டவர்கட்கு குடிவார பாத்தியம் அளிக்கலாமா?

## நில விவசாயக் கமிட்டியின் இதர கேள்விகள்

பர்மா நாட்டுக்கோட்டை செட்டியார் சங்கத்திலிருந்து அடியில் வரும் விஷயங்கள் நமக்கு அறிவிக்கப்படுகின்றன :—

நிலப் பிரச்னைகளையும் விவசாயப் பிரச்னைகளையும் விசாரித்து அறிவிக்குமாறு பர்மா கவர்ன்மெண்டாரால் நியமிக்கப்பெற்ற கமிட்டியார் பொது ஜன அபிப்பிராயத்தை அறிந்து கொள்வதற்காக இரண்டு விஷயங்கள் குறித்து கேள்விகள் தயாரித்து அனுப்பியுள்ளார்கள். குடியாண்மையைக் குறித்தது ஒன்று. அக்கேள்விகளின் மொழிபெயர்ப்பு இங்கு தரப்படுகிறது. மற்றொன்று நிலப் பராதினத்தைக் குறித்தது. அது பிறிதொரு பக்கத்தில் வெளிவருகிறது. அன்பர்கள் இக்கேள்விகளுக்கு டிசம்பர் மாத முடிவிற்குள் பதிலளிக்கும்படி கேட்டிருக்கிறார்கள். இக்கமிட்டியார் ஜனவரி மாதத்தில் தங்களது இடைக்கால அறிக்கையை சர்க்காருக்கு சமர்ப்பிக்க விரும்புகிறார்கள்.

1. சேவாவுக்கு பயிரிடுபவர்களை எதேச்சாதிகாரமாய் நிலச்சுவான்தார்கள் வெளியேற்றுவதிலிருந்து காப்பதற்கு பர்மாவில் சட்டம் செய்வதற்குத் தாங்கள் சாதகமாயிருக்கிறீர்களா? அப்படியானல் பொதுவாக எம்முறையில் அச்சட்டம் செய்யலாம்?

2. ஒரு கிராமத்தில் தொடர்ந்தாற்போல் பன்னிரண்டு வருடங்கள் நிலம் பயிரிட்டுவந்த ஒவ்வொரு விவசாயிக்கும் அந்த கிராமத்தில் தற்சமயம் பயிரிட்டுவரும் நிலத்தில் குடிவாரப் பாத்திய உரிமையளிக்கலாம் என்று ஆலோசனை கூறப்படுகிறது. மற்றொரு ஆலோசனை கூறப்படுவது யாதெனில் நபரையொட்டி உரிமையளிக்க வேண்டாம்; நிலத்தை யொட்டி கொடுக்கலாம். அதாவது ஒரே நிலத்தை தொடர்ந்தாற்போல் ஆறு வருடம் பயிரிட்ட குடியானவர்கட்கு குடிவார பத்திரம் ஏற்பட வேண்டும் என்று கூறப்படுகிறது. இவ்விரண்டிலொன்றுக்கு தாங்கள் சாதகமாயிருக்கிறீர்களா? அப்படியானல் எதற்கு?

3. எந்த நிலைமைகளிலே குடிவார பாத்தியமுள்ள ஒருவரை நிலத்திலிருந்து நிலச்சுவான்தார் வெளியேற்றலாம்?

4 (அ) நிலத்தின் விலை மதிப்பை அதிகம் கெடுக்கக்கூடியவாறு அதனை உபயோகிக்கிறார் என்ற காரணங்கொண்டாவது (அல்லது)

(ஆ) சேவாவுக்குப் பயிரிடும் காரியங்கட்கு நிலத்தை லாயக்கில்லாமல் செய்துவிட்டார் என்ற காரணங்கொண்டாவது; ஓர் சிவில் கோர்ட்டார் வெளியேற்றும்படி உத்தரவிட்டதை நிறைவேற்றி வைக்கும் பொருட்டுத்தான் ஒரு நிலச்சுவான்தார் குடிவார பாத்தியமுள்ள ஒருவரை அப்புறப்படுத்தலாம் என்று ஆலோசனை கூறப்படுகிறது.

இதனை தாங்கள் ஒத்துக்கொள்கிறீர்களா?

5. சேவா பாக்கிக்காக ஒரு சிவில் கோர்ட்டார் கொடுத்த டிக்கிரியை நிறைவேற்றி வைப்பதற்கோ அல்லது நிலவரி செஸ் பாக்கிகளுக்காகவோ அல்லது கவர்ன்மெண்டார் கடன்களையும் முன்பணங்களையும் திருப்பித் தரத் தவறியதற்காகவோ குடிவாரப் பாத்தியதையை விற்கச் செய்யலாம் என்றும், வேறு எக்காரணத்தைக்கொண்டும் விற்கப்படாதென்றும் சொல்லப்படுகிறது, இந்த ஆலோசனையைத் தாங்கள் ஏற்றுக் கொள்கிறீர்களா?

6. மேற்கண்ட 5-வது கேள்விப்படி குடிவாரப் பாத்தியதை விற்கப்பட்டால், விவசாயிகள்தான் ஏலம் கேட்க அனுமதியளிக்கப்படலாம் என்று ஆலோசனை கூறப்படுகிறது. இது தங்கட்குச் சம்மதந்தானா?

7. இதர ஸ்தாவர சொத்துக்களுக்கு இருக்கும் அதேமாதிரி குடிவாரப் பாத்தியதை இன்னொருவர்க்கு (1) மாற்றக்கூடியதாயும் (2) பரம்பரையாய் வார்சுரிமைக்கு யோக்கியதையுள்ளதாயும் இருக்கவேண்டுமா?

8. எக்காரணங்களைக் கொண்டு குடிவாரப் பாத்திய உரிமை ரத்து செய்யப்படவேணும்?

9. ஒரு ஹோல்டிங்கின் கூட்டுப் பங்குதார்களுக் கிடையில் பரிவர்த்தனை அல்லது இனம்செய்து கொள்ளுவதைத் தவிர்த்து, சுதாவாக நிலப் பாரதீனம் செய்தாலும் அல்லது 'நிறைவேற்றுதல்' மூலமாகவானலும் ஓர் ஹோல்டிங்கில் விவசாயிக்குள்ள முதலாளி பாத்தியதைகள் மாற்றப்பட்டால் அந்த ஹோல்டிங்கில் அவர்க்கு குடிவாரப் பாத்தியதையோடு சேவாவுக்குப் பயிரிடும் உரிமை இருத்தல் வேண்டுமென கூறப்படுகிறது. அப்பேர்ப்பட்டவர்கட்கு 'பழைய முதலாளிப் பயிரிடுபவர்கள்' என்று பெயர். இந்த ஆலோசனையை ஏற்றுக் கொள்கிறீர்களா?

10. குடிவார உரிமைகள் ஒன்றும் இல்லாத சேவாவுக்கும் பயிரிடுபவர்களை, அவர்களது நிலச்சுவான்தார்

(23-ம் பக்கம் பார்க்க)



அம்பிகாபதியில் திரு. தியாகராஜ பாகவதர்.



**பழைய சீனா**

சீன நாட்டுப்புறங்களில் இன்னும் பூர்வீக முறைகளே காணப்படுகின்றன. சாமான் ஏற்றிச் செல்லப்படும் ஒரு வண்டியைப் பார்க்க -C.B.



**மெய்யூர் மகாநாடு**

சென்ற வாரம் மெய்யூர் (திருவள்ளூர்) முதலாவது விவசாயிகள் மகாநாடு நடைபெற்றது. கனம் வி. ஐ. முனிசாமி பிள்ளை தலைமை வகித்தார். ஜனாப் முகைதீன் மரக்காயர், ஸ்ரீ. பக்தவத்சலம், தலைவர் சி. என். முத்துரங்க முதலியார் ஆகியோர் உடன் சென்றிருந்தனர்.

—P,B·B.

**மாணவர் எழுச்சி**

குண்டூர் கிருஸ்துவக் கல்லூரி மாணவர்களின் சில குறைகளை கல்லூரி அதிபர்கள் நீக்கி வைக்காததால், அம்மாணவர்கள் வேலை நிறுத்தம் செய்தார்கள். கல்லூரி முன் மாணவர்கள் மறியல் செய்வதைப் பார்க்க. —P.P.B.





**சுதேசிக் காட்சி**

சென்னையில் நடைபெறும் அ. இ. க. காட்சி 19-ந்தேதி ஆரம்பித்து வைக்கப்பட்டது. திறப்பு விழா ஆற்றியவர் விஞ்ஞான நிபுணர் சர். ஸி. வி. ராமன். விழாவின்போது லேடி ராமனும், கனம் ராஜாஜியும் பிரசன்னமாயிருந்தனர். —P.P.B.



## காலஞ்சென்ற ஊழியர்

ஸ்ரீ. R. M. N. நாகப்ப பிள்ளை. திருப்பத்தூர் நாகப்ப மருதப்ப பாடசாலையின் மானேஜராகிய இவர் 21-12-37-ந் தேதியன்று திருப்பத்தூரில் தேகவியோகமானார் என்று அறிவிக்கப்படுகிறது.



## சங்கீத ஆண்டுவிழா

மௌண்ட் ரோடு காங்கிரஸ் மண்டபத்துக்கு சமீபம் வழக்கம்போல் சென்னை சங்கீத கலாசாலையின் ஆண்டு விழா (11-வது) நடைபெறுகிறது. மாங்குடி ஸ்ரீ. சிதம்பர பாகவதர் தலைமை தாங்கினர். ராஜாஜி திறந்து வைத்தார். —I.P.P.S.



(18-ம் பக்கத் தொடர்ச்சி)

கள் நீக்கி விடுவதிலிருந்து ஏதாவது பாதுகாப்பு அளிக்கவேண்டுமா?

11. அவ்விதமான சேவாவுக்கு பயிரிடுபவர்களுக்கு பாதுகாப்பு அளிக்கவேண்டு மென்று நீங்கள் கருதினீர்களானல், எந்த முறையில் அவ்வித பாதுகாப்பை அளிப்பது?

12, குடிவார பாத்தியமுடைய சேவாவுக்குப் பயிரிடும் ஒருவர் வழக்கமாக தன் நிலத்தை பயிரிடும்படியாக வேருெருவர்க்கு கொடுத்து வந்தால் அல்லது சேவா வாங்கும் நோக்கத்தோடேயே அந்த நிலத்தைப் பரிபாலித்து வந்தால் புதிதாகப் பயிரிடுபவருக்கு குடிவார உரிமையை அளிக்கவும், பழைய ஆசாமியின் உரிமைகளை ரத்து செய்யவும் குறிப்பிட்ட விதிகளுக்குட்பட்டு ரெவினியூ ஆபீசர்களுக்கு அதிகாரம் கொடுக்கப்பட வேண்டுமென நீங்கள் நினைக்கிறீர்களா?

13. நிலச்சுவான்தாரின் அனுமதியின் பேரில் நிலத்தில் செய்த அபிவிர்த்திக்காக, குடிவார பாத்தியம் வகித்து அப்புறப்படுத்தப்பெற்ற குடியானவனுக்கு, ஈடுசெய்ய வேண்டுமென சட்டபூர்வமாக விதி ஏற்படுத்த வேண்டுமா?

14. தங்கள் ஜில்லாவில் தற்சமயமிருந்துவரும் சேவா விகிதங்கள் அதிகமானதென்று நினைக்கிறீர்களா? நிதானமானது அல்லது குறைந்தது என்று கருதுகிறீர்களா?

15. 'ஹோல்டிங்'களுக்கு நியாயமான சேவா நிர்ணயிக்கும் அதிகாரத்தை ரெவினியூ ஆபீசர்களுக்கு அல்லது சேவா செட்டில்மெண்டு ஆபீசர்களுக்கு கொடுப்பது உசிதமென்று கருதுகிறீர்களா?

16. நியாயமான சேவா நிச்சயிக்குங் காலத்து, சேவா செட்டில்மெண்டு ஆபீசர் அல்லது ரெவினியூ ஆபீசர், எவ்வெவ் விஷயங்களைக் கவனித்து நிச்சயிக்க வேண்டும்?

17 பழைய முதலாளிப் பயிரிடுபவர்கள், அவர்களது நிலங்களுக்கு உரிய நியாயமான சேவாவில் 100-க்கு 90 விதம் சேவாதாரும் உரிமையளிக்கப்பட வேண்டுமென யோசனை கூறப்படுகிறது. தங்களுக்கு அந்த யோசனை சம்மதம் தானு?

18. நில வரியைக் குறைக்கும் அதிகாரிகளுக்கு, (1) குறைந்த நில வரிக்கு இரண்டு மடங்கு, அல்லது (2) மொத்த நில வரியில் குறைத்த நில வரி என்ன பாகமோ அப் பாகத்திற்கு சரியாக உள்ள, சேவாவை, சேவாவுக்கு பயிரிடுபவர்களுக்குக் குறைத்துக் கொடுக்க, அதிகாரமளிக்க சட்டபூர்வமாய் விதி செய்யப்பட வேண்டுமா? நில வரியில் இத்தனை மடங்கு குறைவு என தாங்கள் வேறு ஏதாவது கூற விரும்புகிறீர்களா?

19. சேவாவுக்குப் பயிரிடுபவர்கட்கு அளிக்கப்படும் குடிவார உரிமை, இதர உரிமைகளுக்கு ஈடாக நிலத்தின் மாசூலில் சேவா ஓர் பாத்தியமாக யிருத்தல் வேண்டாமா?

20. எம் முறையில் அவ்வித பாத்தியதையை அமுலுக்கு கொண்டு வருகிறது?

21. 1927-ம் வருஷத்து பர்மா விவசாய மசோதாவில் சொல்லப்பட்டிருந்த முறை யாதெனில் சேவாவுக்கு பயிரிடுபவரால் நிலத்திலிருந்து மாசூல் அப்புறப்படுத்தப்படுமென பயப்படும் நிலச்சுவான்தார் கிராமத்து தக்கியிடமாவது, அல்லது கிராமத்துக் கமிட்டியிடமாவது செய்துகொள்ளும் மனுவின் பேரில், கிராமக் கமிட்டியார் மாசூலை சில் வைக்கிறது, சில்லிருக்கும் காலத்தில் மாசூலைக் கவனித்துக் கொள்வதற்கு. யாரிடத்தில் மனுப் போடப்படுகிறதோ, அவர் ஒரு ஆளை நியமிப்பார். சில் வைக்கப்பட்ட மாசூலை மனோராஜியாய்ப் பிரித்துக்கொடுக்க கிராமக் கமிட்டியாரால் முயற்சி செய்யப்படும். மனோராஜியாய்ப் பிரித்துக் கொடுக்க முடியாமற்போனல் சேவாவை வசூல் செய்வதற்காக ஒரு சிவில் கோர்ட்டில் வழக்கு தொடர்வதற்கு நிலச்சுவான்தாருக்கு உரிமையுண்டு. மேலே பொதுப்படையாய்ச் சொல்லியுள்ள ஆலோசனையைத் தாங்கள் ஏற்றுக்கொள்கிறீர்களா? அல்லது தாங்கள் வேறு ஏதாவது ஆலோசனை கூறுகிறீர்களா?

22. மேலே சேவா பாக்கிக்கு கூறியிருப்பது போலவே நில சாகுபடியில் உபயோகப் படுத்தப்பெற்ற மாடுகளின் சேவாபாக்கிக்கும், தொழிலாளிகளின் கூலி பாக்கிக்கும் மாசூலில் பாத்திய மளிப்பது தங்கட்குச் சம்மதந்தானு?

23. நிலத்தின் மாசூலில் பாத்தியதை யேற்படுத்த வேண்டுமென தாங்கள் கருதுகிற இதர இனங்கள் ஏதேனும். இருக்கின்றனவா?

24. 'விவசாயி' என்னும் பதத்திற்கு கீழ்க்கண்ட வியாக்கியானம் பிரரேபிக்கப்படுகிறது:—

விவசாயி என்ருல்-(அ) தன் வாழ்க்கைக்கு முக்கிய ஆதாரமாக தன் சுயப்பிரயாசையினுலே நில சாகுபடியில் வழக்கமாக ஈடுபட்டு வந்த அல்லது ஈடுபட்டிருக்கிற ஒருவர் அல்லது.

(ஆ) கீழ்க்காணும் இரண்டு நிபந்தனைகளையும் பூர்த்தி செய்பவர், அதாவது:—

(1) மாடுகளையும் சாகுபடியில் உபயோகிக்கும் மற்றவைகளையும் கண்காணித்தல் உள்பட நில சாகுபடியில் எல்லா துறைகளையும், வருடத்தில் வேலை செய்யும் எல்லாக் காலங்களிலும் தான் நேராய் மேல் பார்ப்பவர்.

(2) அவ்விதம் மேல் பார்ப்பதன் மூலமாவது அல்லது தன் சுயப்பிரயாசையின் மூலமாவது அல்லது அவ்விரண்டும் சேர்ந்தாவது தன் வருமானத்தின் பெரும் பாகத்தை சம்பாதிப்பவர். இவ் வியாக்கியானத்தை தாங்கள் ஏற்றுக் கொள்கிறீர்களா? அல்லது வேறு வியாக்கியானம் ஏதாவது சொல்ல விரும்புகிறீர்களா?

25. அதற்கென விளம்பரப்படுத்தப்பட்ட பிரதேசங்களில் பழைய முதலாளி சாகுபடி செய்பவர்கள். குடிவாரப் பாத்தியமுடையவர்கள், இவர்களை ரிஜிஸ்தர் செய்துகொள்ளக் கோருதற்கு, அல்லது அனுமதிப்பதற்கு கவர்ன்மெண்டாருக்கு அதிகாரம் கொடுக்கத் தாங்கள் சம்மதிக்கிறீர்களா?

26. குடியேறிய சேவாவுக்குப் பயிரிடுபவர்கள் தங்கள் ஜில்லாவில் இருக்கிறார்களா? அவர்களது எண்ணிக்கை அதிகமா, கொஞ்சமா? அவ்விதம் குடியேறுவதற்கு காரணங்களென்ன? குடியேறி சேவாவுக்குப் பயிரிடுபவர்களின் எண்ணிக்

னகயைக் குறைப்பதற்கு தாங்கள் ஏதேனும் வழிகள் சொல்லக்கூடுமா?

47. பர்மாவில் சேவா சட்டம் செய்வது சம்பந்தமாய் தாங்கள் வேறு ஏதாவது ஆலோசனை கூற விரும்புகிறீர்களா?

---

## நிலப் பராதீன சட்டம் ஏற்படுத்துவதுபற்றிய கேள்விகள்

---

### நில விவசாயக் கமிட்டியின் பரிசீலனை

---

1. (அ) விவசாயிகளிடமிருந்து விவசாயிகளல்லாதாருக்கு நிலங்கள் பராதீனம் செய்வதைத் தடுக்க, நடைமுறைக்குக் கொண்டுவர, பர்மாவில் சட்டம் இயற்றுவதற்கு நீங்கள் சாதகமா யிருக்கின்றீர்களா?

(ஆ) நீங்கள் அப்படியிருப்பின், பொதுவாக, எந்த வழிகளில் அச்சட்டத்தை அமைக்கலாம்?

2. (அ) விவசாயிகளிடமிருந்து விவசாயிகளல்லாதாருக்கு நிலங்களை நிரந்தரமாகப் பராதீனம் செய்வதை எதிர்காலத்தில் சட்டத்தின் மூலமாக தடைசெய்ய வேண்டுமென்று யோசனை சொல்லப் பெறுகின்றது. நீங்கள் இதற்கு ஒத்துக்கொள்கிறீர்களா?

(ஆ) நீங்கள் ஒத்துக்கொள்ளாவிடின், அத்தகைய பராதீனங்களை சட்டத்தின் மூலமாக அடக்கி நடைமுறையில் கொண்டுவர வேண்டுமென்று நீங்கள் நினைக்கின்றீர்களா? ஆனால் அவைகளை யடக்கி, நடைமுறையில் கொண்டுவர எத்தகைய வழிகளைக் கையாள வேண்டும்?

3. விவசாயிகளிடமிருந்து விவசாயிகளல்லாதாருக்கு நிலங்களைத் தற்காலிகமாக பராதீனம் செய்வதை (நில அடமானம் முதலியவைகளினால்) தடைசெய்ய முடியும் என்று கருதுகின்றீர்களா? அப்படி நீங்கள் கருதினால், எந்தவிதமாக அவைகளைத் தடைசெய்து அமுலுக்குக் கொண்டு வர முடியும்?

4. விவசாயிகள் தங்கள் நிலங்களை விவசாயிகளல்லாதாருக்கு அடமானம் செய்தால் (ஈடுசெய்து பணம் வாங்கினால்) கீழ்க்கண்ட வகைகளில் ஏதாவது ஒரு வகையில் இத்திக்கும்படி சட்டம்செய்ய வேண்டுமென்று ஆலோசனை சொல்லப்பெறுகின்றது.

(அ) நிலத்தை ஈடுகாட்டி அதன் மீது பணம் வாங்குவோர் (நிலத்தை அடமானம் செய்பவர்) நிலத்தில் உண்டாகும் சாகுபடிகளையும், லாபங்களையும், வட்டிக்குப் பதிலாக, பணம் கொடுத்தவர் அனுபவிக்க வேண்டுமென்றும், செய்துகொள்ளப் பெற்ற தவணை கழிந்த பிறகாவது அல்லது (ஒரு தவணைக்கும் ஒத்துக்கொள்ளாமலிருந்தாலும், ஒத்துக்கொண்ட தவணை பதினைந்து ஆண்டுகளுக்கு அதிகமா யிருந்தாலும்) பதினைந்து ஆண்டுகள் கழிந்த பிறகாவது, முதலைக் கொடுத்ததும் நிலத்தைத் திருப்பித்தர வேண்டுமென்னும் நிபந்தனையின்மீது செய்துகொள்ளும் பலானுபவ (நிலத்தை சொந்தம் கொண்டாடாமல் நிலத்தில் விளையும் பலன்களைச் சொந்தம் கொண்டாடுதற்குரிய) அடமானத்தின் மூலமாக அல்லது;

(ஆ) நிலத்தை அடமானம்செய்து பணம் வாங்கினவர் ஒப்பந்தப் பிரகாரம் முதலையும், வட்டியையும் கட்டத் தவறினால், பணம் அளித்தவர் அந்நில பலனை, பதினைந்து ஆண்டுகளுக்கு மேல்படாமல் கலெக்டர் கருதும் உசிதானுசிதப் பிரகாரத் தவணை வரையில் அனுபவிக்கவேண்டியும்: கலெக்டர் நியாயமென்று ஒப்புக்கொள்ளுகின்ற தகுதியான வட்டி, தவணையோடு கூடிய பணத்திற்கு அதிகப்படாமல், பணம் கொடுத்தவருக்கு சேரவேண்டியிருக்கும் மீதமான முதலும் வட்டியும் சேர்ந்த தொகைக்கு ஈடாக, ஒரு தவணைவரை, அடமானத்தை பலானுபவ அடமானமாக பாவிக்கவேண்டியும்; கலெக்டருக்கு விண்ணப்பித்து கொள்ளலாம் என்ற நிபந்தனைக்குட்பட்டு செய்து கொள்ளும் பலானுபவமில்லாத அடமானத்தின் மூலமாக அல்லது;

(இ) குறிப்பிடப் பெற்றுள்ள இடங்களுக்காக அல்லது அரசாங்கம் பொதுவாக விதித்துள்ள வேறு எந்த வகையிலாவது நீங்கள் இந்த ஆலோசனையை ஒத்துக் கொள்ளுகின்றீர்களா, அல்லது ஏதாவது மாறுபட்ட ஆலோசனையைத் தெரிவிக்கப் போகின்றீர்களா?

5. நான்காவது கேள்வியில் குறிப்பிடப்பெற்றுள்ள (அ) அல்லது (ஆ) வகை அடமானத்தில், ஓர் குறிப்பிட்ட காலம் (தவணை) ஆனவுடனே, பணம் கொடுத்தவருக்கு, வாங்கினவர் பணம் கொடுக்காமலே அடமான கடனை நிவர்த்திசெய்து விடுவது; அதாவது நிலத்தின்மீது பணம் கொடுத்தவர், ஓர் குறிப்பிட்ட காலம் நிலத்தின் பலனை அனுபவித்ததற்கு ஈடாக முதலும் வட்டியும் சேர்ந்த கடனை தள்ளி விடுவது; இந்த ஆலோசனையும் சொல்லப் பெறுகின்றது. இந்த ஆலோசனைக்கு நீங்கள் ஒத்துக் கொள்கின்றீர்களா?

6. அனுமதிக்கப் பெற்றுள்ள அடமானங்களில், அடமானம் வைத்துப் பணம் வாங்கினவர், அடமானம் நடைமுறையிலிருந்து வரும் காலத்தில், எப்பொழுதாகிலும் அடமான கடனைக் கொடுத்தும், 4-வது கேள்வியில் குறிப்பிடப்பெற்றுள்ள (அ) அல்லது (ஆ) அடமானத்தில், நியாயமானதென்று சிவில் கோர்ட்டு தீர்மானிக்கின்ற அடமான கடன் பகுதியைக் கொடுத்தும் நிலங்களை மீட்பதற்கு அனுமதியளிக்கும்படி ஆலோசனை சொல்லப்பெறுகின்றது. இந்த ஆலோசனையை நீங்கள் ஒத்துக் கொள்ளுகின்றீர்களா?

இத்தகைய வழக்குகளை விசாரிப்பதற்குத் தகுதியான மன்றம் சிவில் கோர்ட் என்று நீங்கள் கருதுகின்றீர்களா? அல்லது இத்தகைய வழக்குகளில் கலெக்டர்தான் தீர்ப்பளிக்க வேண்டுவது உசிதமென்று கருதுகின்றீர்களா?

(7) நான்காவது கேள்வியில் குறிப்பிடப்பெற்றுள்ள அடமானங்கள் விஷயத்தில் கட்சிக்காரர்களிடையில் நடைபெறும் ஒப்பந்தத்தில் சில விசேஷ நிபந்தனைகள் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று ஆலோசனை கூறப்பெற்றிருக்கின்றது. ஆலோசிக்கப்பெற்ற நிபந்தனைகளாவன:—

(அ) நிலத்தை அடமானம் வைத்து பணம் வாங்கினவர், நிலத்தைத் திரும்பப்பெற்று அதன் பலனை அனுபவிக்க வேண்டிய விவசாய ஆண்டின்



காலத்தைத் தீர்மானிக்கும் ஒரு நிபந்தனை.

(ஆ) மரங்களை ஈடு செய்தல் அல்லது அவைகளை வெட்டுதல், விற்றல் அல்லது நிலத்தின் நிரந்தரமான மதிப்பைப் பாதிக்கத்தக்க வகையில் ஏதாவது செய்தல் முதலிய விஷயங்களில், நில அடமானத்தில் பணம் வாங்குபவர் அல்லது பணம் கொடுப்பவர் உரிமைகளை வரையறுக்க வேண்டிய நிபந்தனைகள்.

(இ) அரசாங்கம் விதிக்கும் ஏதாவது நிபந்தனை.

இந்த ஆலோசனைக்கு நீங்கள் உடன்படுகின்றீர்களா அல்லது நீங்கள் தெரிவிக்கவேண்டிய வேறு அபிப்பிராயங்கள் இருக்கின்றனவா?

8. ஆலோசிக்கப்பெறும் சட்டத்தின்கீழ் கூறியுள்ளபடி, யல்லாது, வேறு எந்த வகையிலாவது ஒரு விவசாயி தன்னுடைய நிலத்தை அடமானம் செய்வாரானால், பணம் கொடுத்தவர் உரிமை கொண்டாடும் விஷயத்தில் தமக்கு நியாயமெனத் தோன்றிய முறையில் கலெக்டர், நான்காவது கேள்வியில் கண்டுள்ள விஷயங்களில் அடங்கும்படி, அடமான முறைகளை மாற்றியமைக்க அதிகாரம் பெறலாம் என்று ஆலோசனை கூறப்பெறுகின்றது.

நீங்கள் இந்த ஆலோசனைக்கு ஒத்துக் கொள்ளுகின்றீர்களா?

9. விவசாயிகள் தங்கள் நிலங்களை விவசாயிகளல்லாதாருக்கு நீண்ட காலத்துக்குக் (தவணைக்கு) குத்தகை விட்டு ஆலோசிக்கப்பெறும் சட்டத்தை நழுவ விடுவதை தடைசெய்யும் பொருட்டு, ஒரு விவசாயி தன்னுடைய நிலத்தை வேறொருவருக்குக் குத்தகைக்கோ அல்லது பயிரிடுவதற்கோ, ஒரே சமயத்தில் பத்து ஆண்டுகளுக்குமேல் விடுவதற்கு அனுமதியளிக்கலாகாது என ஆலோசனை கூறப்பெறுகின்றது.

இத்தகைய திட்டம் உசிதம் என்பதைப்பற்றி நீங்கள் எப்படி கருதுகின்றீர்கள்?

10. ஒரு விவசாயி, தன்னுடைய நிலத்தின் விளைபொருள்களை நீண்ட காலம் வேறொருவருக்கு அளிக்க வேண்டுமென்று செய்யும் ஒப்பந்தங்களைத் தடுக்கும்பொருட்டு, இத்தகைய ஒப்பந்தங்கள் ஒரு ஆண்டுக்குமேல் நடைமுறையிலிருக்க அனுமதியளிக்கலாகாதென்று ஆலோசனை கூறப்பெறுகின்றது. இத்தகைய திட்டம் உசிதமென்று நீங்கள் கருதுகின்றீர்களா?

11. ஆலோசிக்கப்பெறும் சட்டம் நடைமுறைக்கு வந்த பிறகாகிலும், வருவதற்கு முன்னாகிலும் சிவில் அல்லது ரெவின்யூ கோர்ட்டில் பாஸான டிகிரியையோ அல்லது கட்டளையையோ, நிறைவேற்றும் பொருட்டு ஒரு விவசாயிக்குச் சொந்தமான நிலத்தை ஒரு விவசாயி அல்லாதாருக்கு விற்கலாகாது என்று ஆலோசனை கூறப்பெறுகின்றது. இத்தகைய திட்டம் உசிதம்தானென்று நீங்கள் கருதுகின்றீர்களா?

12. அரசாங்கமோ அல்லது ரெவின்யூ உத்தியோகஸ்தரோ, ஆலோசிக்கப்பெறும் சட்டத்தின் மூலமாக செய்யவேண்டிய அதிகாரம் பெற்றிருக்கும் எவ் விஷயத்திலும், சிவில்கோர்ட் தனது நியாய ஆதிக்கத்தைச் செலுத்தலாகாது என்று ஆலோசனை கூறப்பெறுகின்றது. இதற்கு நீங்கள் ஏதாவது தடையைக் காண்கின்றீர்களா?

13. ஏதாவது ஒரு சிவில் கோர்ட் ஒரு விவசாயியினால் (உண்டாகும்) நிரந்தரமான நிலப்பராதீன விஷயத்தைப்பற்றியோ அல்லது ஒரு விவசாயி தன்னுடைய நிலத்தை விவசாயி அல்லாதாருக்கு அடமானம் செய்யும் விஷயத்தைப் பற்றியோ டிகிரியையோ அல்லது ஒரு கட்டளையையோ நிறைவேற்றினால், ஆலோசிக்கப்பெறும் சட்டத்தின் திட்டங்களுக்கு, அந்த கட்டளையோ அல்லது டிகிரியோ மாறுகத்தோன்றும் விஷயத்தில் புனராலோசனை செய்யும் பொருட்டு உயர்தர கோர்ட்டில் புனர் விசாரணை செய்வதற்கு கலெக்டர் வேண்டுவன செய்ய வேண்டி, கலெக்டருக்கு அத்தகைய டிகிரி அல்லது கட்டளையின் நகலை அனுப்பலாம் என்று ஆலோசனை சொல்லப் பெறுகின்றது.

இந்த ஆலோசனைக்கு நீங்கள் ஒத்துக் கொள்ளுகின்றீர்களா?

14. ஆலோசிக்கப் பெறும் சட்டத்தை அமுலுக்குக் கொண்டு வருவதிலிருந்து அல்லது அச்சட்டத்தின் ஏதாவது ஒரு பாகத்தை அமுலுக்குக் கொண்டு வருவதிலிருந்து, ஏதாவது ஒரு ஜில்லாவையோ, அல்லது ஒரு ஜில்லாவின் பாகத்தையோ அல்லது ஒரு தனி நபரையோ அல்லது சில நபர்கள் அடங்கிய வகுப்பையோ விலக்கி விடுவதற்கு அரசாங்கம் அதிகாரம் பெற்றிருக்க வேண்டுமென்று ஆலோசனை கூறப் பெறுகின்றது. இந்த ஆலோசனைக்கு நீங்கள் ஒத்துக் கொள்ளுகின்றீர்களா?

15. ஆலோசிக்கப்பெறும் சட்டத்தில் குறிப்பிட்ட இடத்திலுள்ள விவசாயிகள் ரிஜிஸ்தர் செய்துகொள்வதற்கு அனுமதி அளிப்பதற்கும் தூண்டுவதற்கும் அரசாங்கத்திற்கு அதிகாரம் வேண்டும் என்று ஆலோசனை கூறப்பெறுகின்றது. இந்த ஆலோசனைக்கு நீங்கள் ஒத்துக் கொள்ளுகின்றீர்களா?

16. நிலப் பராதீன விஷயமாக ஆலோசிக்கப்பெறும் சட்ட சம்பந்தமாக நீங்கள் தெரிவித்துக்கொள்ள வேண்டிய ஆலோசனைகள் ஏதாவது இருக்கின்றனவா?

---

கண்டனூர்

### ஸ்ரீராமகிருஷ்ண சங்க ஆண்டு விழா

டிச. 26உ மாலை 4-30 மணிக்கு ஸ்ரீ ராமகிருஷ்ண சங்கத்தின் இரண்டாவது ஆண்டு 10வது மாதாந்திரக் கூட்டம் திரு. சோம. நாச்சியப்பன் அவர்கள் தலைமையில் கூட்டப் பெற்றது.

தலைவர் முன்னுரைக்குப் பின் ஆண்டு விழாவை மாசி மாதத்தில் நடத்துவதென்றும் அதற்கு திரு. வி. கலியாணசுந்தர முதலியார் அவர்களைத் தலைவராகவும் சொற்பொழிவாற்றுவதற்கு திரு. உ. முத்துராமலிங்கத்தேவர், சித்பவானந்த மடிகள், பிச்சப்பா சுப்பிரமணியம், ஸ்ரீ பாரதியின் மகள் தங்கம்மாளையும் வரவழைப்பதென்று தீர்மானிக்கப் பெற்றது.

ஆண்டு விழாவை நடத்துவதற்கு திரு. பி. ராம. அவர்கள் வீட்டைக் கேட்பது என்றும் தீர்மானிக்கப் பெற்றது.

ஆண்டு விழாவிற்கு வரவேற்புக் கழகத் தலைவராக திரு. கரு. பழனியப்ப செட்டியார் ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பெற்றார்.

# விலைவாசிகள்

## வட்டி விகிதம்

### ரெங்கூன் நடப்பு வட்டி

| | | | | |
|---|---|---|---|---|
| ஈஸ்வர சித்திரை வட்டி | ரூ. | 0 | 4 | 0 |
| „ வைகாசி „ | ரூ. | 0 | 4 | 0 |
| „ ஆனி „ | ரூ. | 0 | 4 | 0 |
| „ ஆடி „ | ரூ. | 0 | 4 | 0 |
| „ ஆவணி „ | ரூ. | 0 | 4 | 0 |
| „ புரட்டாசி „ | ரூ. | 0 | 4 | 0 |
| „ ஐப்பசி „ | ரூ. | 0 | 4 | 0 |
| „ கார்த்திகை „ | ரூ. | 0 | 4 | 0 |

### மதராஸ் நடப்பு வட்டி

| | | | | |
|---|---|---|---|---|
| ஈஸ்வர சித்திரை வட்டி | ரூ. | 0 | 7 | 0 |
| „ வைகாசி „ | ரூ. | 0 | 6 | 6 |
| „ ஆனி „ | ரூ. | 0 | 6 | 6 |
| „ ஆடி „ | ரூ. | 0 | 6 | 3 |
| „ ஆவணி „ | ரூ. | 0 | 6 | 0 |
| „ புரட்டாசி „ | ரூ. | 0 | 5 | 6 |
| „ ஐப்பசி „ | ரூ. | 0 | 5 | 6 |
| „ கார்த்திகை „ | ரூ. | 0 | 6 | 0 |

### செய்கோன்

| | | | |
|---|---|---|---|
| ஈஸ்வர கார்த். நடப்பு வட்டி | 0 | 4 | 0 |
| „ „ தவணை வட்டி | 0 | 4 | 0 |

18—12—37-ல் நெல் விலை பிக்கல் 1-க்கு 4$10 லிருந்து 4$15 வரை.

உண்டியல் விலை இந்தியாவுக்கு 89-5/8.

சிங்கப்பூருக்கு 57-5/8.

### பினங்கு

| | | | |
|---|---|---|---|
| ஈஸ்வர புரட். நடப்பு வட்டி | 0 | 4 | 0 |
| „ „ தவணை வட்டி | 0 | 3 | 6 |

உண்டியல் 155

### சிங்கப்பூர்

| | | | |
|---|---|---|---|
| ஈஸ்வர புரட். நடப்பு வட்டி | 0 | 4 | 0 |
| „ „ 1உ தவணை „ | 0 | 3 | 6 |
| „ புரட். 16உ „ | 0 | 3 | 6 |

## தங்கம், வெள்ளி

சென்னை, டிசம். 29உ

| | | | |
|---|---|---|---|
| பம்பாய் ஆலைத் தங்கம் | 34 | 4 | 9 |
| ஷை வாய்தா | 34 | 6 | 3 |
| மூனா தோலா 1-க்கு | 33 | 14 | 9 |
| சவரன் மொத்தம் | 22 | 7 | 6 |
| சவரன் சில்லரை | 22 | 8 | 0 |
| வெள்ளி ரூ. 100 எடை | 47 | 5 | 0 |
| ஷை ரூ. 1 எடை | 0 | 8 | 3 |

### வட்டி

ரிசர்வ் பாங்க் வட்டி:—3 பெர்செண்டு

இங்கிலாந்து பாங்க் வட்டி:—2 பெர்[செண்டு

### ரப்பர்

லண்டன், டிசம். 28உ

புகைபோட்ட ரப்பர் (ஸ்டாண்டர்டு) ராத்தல் 1-க்கு

„ வாங்குபவர் விலை 7 1/8 பென்ஸ்

„ விற்பவர் „ 7¼ „

### மாங்கொம்பு

கடன் நிவாரண மசோதாவுக்காதரவு

17-12-37-ந் தேதி காலை 9 மணிக்கு கிராம சபையின் சார்பாக காந்தி சதுக்கத்தில் திரு. சி. பொன்னையா பிள்ளை அவர்கள் தலைமையில் ஓர்பொதுக் கூட்டம் நடந்தது. அதில் அடியில் வரும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது:—

ஏழை விவசாயிகளின் கடன் சுமையை நீக்கி அவர்கள் விவசாயத் தொழிலை தடையின்றி நடத்துவதற்காக சென்னை மந்திரி சபை தயாரித்து பிரசுரித்திருக்கும் விவசாயிகளின் கடன் நிவாரண மசோதாவை இப் பொதுக்கூட்டம் முழு மனதுடன் ஆதரிக்கின்றது. இம் மசோதாவை கூடிய சீக்கிரம் அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென்று சென்னை காங்கிரஸ் மந்திரி சபையை இப் பொதுக்கூட்டம் கேட்டுக்கொள்கிறது.

## கப்பல்

### சென்னையிலிருந்து

ரங்கூன்

எதோபியா :—ஜன. 3-ந் தேதி வந்து 7-ந் தேதி புறப்படும்.

எிின்புரா:—ஜன. 10-ந் தேதி வந்து 14-ந் தேதி புறப்படும்.

### மலாயா—சென்னை

ரஜூலா:—டிசம். 25-ந் தேதி வந்து 28-ந் தேதி புறப்படும்.

ரோனு :—ஜன. 8-ந் தேதி வந்து 11-ந் தேதி திரும்பிப் போகும்.

### நாகப்பட்டணத்திலிருந்து மலாய் நாட்டுக்கு

| | |
|---|---|
| ரஜூலா | 1—1—38 |
| ரோனு | 15—1—38 |

### மலாய் நாட்டிலிருந்து நாகப்பட்டணத்துக்கு

| | |
|---|---|
| ரஜூலா | 20—1—38 |

### மதராசிலிருந்து சிங்கப்பூர் செய்கோனுக்கு புறப்படும் கப்பல்கள்

(வி. கே. அய்யர் அறிவிக்கிறார்)

| | |
|---|---|
| வில்தொவர்தன் | 20—1—38 |



# பசிக் கொடுமை!

(ஈரோடு V. அருணாசலம்.)

கொள்ளை கொலைகள் நடத்திடவும் கொடியசெயல்கள் புரிந்திடவும்
எள்ளல் கேட்டும் புல்லர்கள்பால் இருந்துவாடி ஏங்கிடவும்
கிள்ளை யென்னக் கூறியதைக் கூறிநின்றே கேடுறவும்
துள்ளிப் பாடிக்குதித்திடவும் செய்யும் வயிற்றில் தோன்றும்தீ. (1)

தக்கார் பெரியார்தமை யிழந்தும் தகுதியில்லாப் புல்லர்களை
மிக்கார் என்னமிகப் புகழ்ந்து மேன்மைகெட்டுச் செயலிழந்து
செக்கான் எருத்துமா டென்னத்தீயோர் தங்கள் இல்லத்தே
எக்காலத்தும் பணிசெய்ய இருத்தும் பசிநோய் எனுந்தீயே. (2)

மானம் அறிவு பிறவெல்லாம் மங்கி நிலைமைகெட்டழிந்து
ஈனமுள்ள அத்தனைக்கும் இல்லமென்ன அவையேற்று
தானமென்னும் சொல்லறியாத் தன்மையாளன் தனைப்பெரிய
வானமொத்த வள்ளலென வழங்கச் செய்யும் பசிநோயே. (3)

அற்பர் சிறியர் புல்லறிவர் ஆண்மையில் லார்காலடிக்கீழ்
நிற்பதிழி வென்றோராது நீர்மைகெட்டுச் சீரழிந்து
கற்பதருவே அருமணியே காமதேனே கொடையோனே
விற்பனங் கொள்சீமானே என்றே விளம்பச் செய்திடுமால். (4)

அன்பு கொள்ளும் சுற்றமுடன் அரியநண்பர் மனைவியரை
இன்பு பொருந்தும் புதல்வர்களை இல்லந்தன்னைப் பதிதன்னை
துன்பு கொள்ளப் பிரிந்து வெகுதூரத்தூர்கள் செலச்செய்து
வன்பு கொள்ளச் செய்திடுமால் வயிற்றினுறையும் பெருந்தீயே. (5)

காதல்தனையும் வதைசெயுமால் கருணைதனையும் கொன்றிடுமால்
சாதல்தனையும் ஈந்திடுமால் சாந்தம் அனைத்தும் போக்கிடுமால்
ஈதல் என்னும் சொல்லதனை எட்டிக்காயாச் செய்திடுமால்
தீதேபுரிய அஞ்சாதால் தீயவயிற்றுப் பசிநோயே. (6)

அஞ்சவேண்டா தவைக்கஞ்சி ஆண்மைகெட்டு அறிவிழந்து
பஞ்சைப்பாட்டு பலபாடி பாவத்தீய செயலெதற்கும்
நெஞ்சு துணிந்து செயச்செய்து நேர்மையழித்துப் புகழ்வதைத்து
வஞ்சம்கரவு பகைபிளவு வளர்க்கும் வயிற்றுப் பசிநோயே. (7)

இந்தப் பசியின்கொடுமை தனக்கிடனே யின்றி யொழித்துவிட
அந்தமிலாப் பெரும்பொருளீர்! அளவிடங்கா நிலமுடையீர்!
சொந்த வாழ்க்கைதனை யுதறித்தூய பொதுவாழ்விற் புகுந்தீர்!
எந்தநாளில் முன்றசெய்தல்? எழுவீர் இன்றே எழுவீரே! (8)

# மாணவரும் ஆசிரியரும்

(தென்னுப்பிரிக்கா—டர்பன்—திரு. ச. முனிஸ்வாமி பிள்ளை)

நம்முடைய கல்வி முறையானது, இளைஞர்களை இளைஞர்கள் என்று அங்கீகரிக்கிறதேயில்லை. குழந்தைகளிடத்தில் காணப்படும் விளையாட்டுப் புத்தி, இயற்கையின் அருளே என்பதையும், எப்பொழுதும் ஓடி ஆடி விளையாடி சுறு சுறுப்பாயிருக்கிற தன்மையினுல் அவை புதிய விஷயங்களையும் கிரகிக்க வேண்டுமென்பதையும் தற்கால ஆசிரியர்கள் மறந்துவிடுகிறார்கள். இதனுல் ஆசிரியர்மாருக்கும் இயற்கைத் தேவதைக்கும் ஏற்படும் போராட்டத்திற்குக் குழந்தைப் பருவமுள்ள மாணவர்கள் யுத்தகளமாய் ஏற்பட்டு விடுகிறார்கள்.

குழந்தையின் மனதை ஒரே இடத்தில் சேர்த்துவைப்பதினுலேயே அதற்குக் கல்வி கற்றுக்கொடுக்க முடியும் என்று ஆசிரியர் நினைக்கிறார். ஆனல் குழந்தைகளின் மனதைப் பல இடங்களில் பரப்பிவிடுவதனுலேயே அது விருத்தியடைய முடியும் என்று இயற்கைத் தேவதை நினைக்கிறாள். நாம் குழந்தைகளாயிருந்த காலத்தில், நமது மனோசாந்தியை பல இடங்களில் பரப்பிவிட்டதினுலேயும் எதிர்பாராத ஆச்சரிய சம்பவங்களினுலுமே நாம் பல உண்மைகளை அறிந்து கொண்டோம். குழந்தைகள் மனது ஆச்சரியப்படும்படியான உண்மைகள் அவ்வப்பொழுது தோன்றிக் கொண்டிருந்ததால், அவைகள் மனது சுறு சுறுப்பாயிருக்க முடியும். ஆனல், புதிய விஷயங்களை அறிய வேண்டுமென்ற அவா பிள்ளைகளுக்கிருந்தால் அதுவே தவறென்று பள்ளிக்கூட உபாத்தியாயர்கள் கண்டிக்கிறார்கள்.

குழந்தைகளின் மனதில் எவ்வித நோக்கமும் ஏற்படாமலிருப்பதையே நாம் முக்கியமாகக் கவனிக்கவேண்டும். நமக்கு வயதான பிறகு, நமது வாழ்க்கையை, குறித்த சில நோக்கங்களைக்கொண்ட ஒரு சுமையாகவே கொண்டு விடுகிறோம். நமது நோக்கங்களுக்குப் புறம்பாயுள்ள எல்லாவற்றையும் நாம் புறக்கணித்து விடுகிறோம். நாம் கொண்டுள்ள நோக்கம், நமது மனோசக்தி அனைத்தையும் கவர்ந்துவிடுகிறது. இதனுல் நம்மைச் சுற்றியுள்ள பிறவிஷயங்கள் நமது கவனத்திற்குட்படாமல் போய்விடுகின்றன. நமது மனோசக்தி, குறித்த ஒரு குறுகிய வழியினூடே மாத்திரம் செல்கிறது. வாழ்ந்துகொண்டிருப்பதைத் தவிர வேறெவ்வித நோக்கமும் குழந்தைகளின் மனதில் புகுவதில்லையாதலால், அது தன்னைச் சுற்றியுள்ள எல்லா விஷயங்களையும் பார்க்கிறது. எல்லா விஷயங்களையும் எவ்வித வேற்றுமையுமின்றிக் கிரகித்துக் கொள்கிறது. ஆனல், பள்ளிக்கூட ஆசிரியனுக்கு குறித்த ஒரு நோக்கம் ஏற்பட்டிருக்கிறது. தான் ஏற்கெனவே கொண்டுள்ள ஒரு மனோநிடப்படி குழந்தைகளின் மனதை அமைக்க அவன் முயலுகிறான். தன் மனோநிலைக்கு எது மாறுபட்டிருக்கிறதோ அதுவே குழந்தைகளின் மனோநிலைக்கும் மாறுபட்டதென்று அவன் கருதுகிறான். தன்னுடைய கல்வித் திட்டத்தினின்றும் இயற்கைத் தோற்றங்களையும், பிற உயிரிலுள்ள அம்சங்களையும் தள்ளிவிட்டு, இயற்கை அரசியின் அருளாட்சிக்குட்பட்டிருக்கும் நிரபராதியான குழந்தையை இழுத்துக்கொண்டு வந்து தன்னுடைய சிறை வீட்டில் அடைத்துவிடுகிறான். இச்சிறை வாசமே குழந்தையின் மனோசக்தியை அதிகப்படுத்தும் என்றும் இவன் கருதிவிடுகிறான். பொதுவாகக் கூறுமிடத்து, குழந்தைகளின் மனோநிலைமைக்கும், வயதானவர்கள் மனோநிலைமைக்கும் பல அம்சங்களில் வேற்றுமை இருக்கிறதென்பதை அவன் அறிவதேயில்லை.

மேற் கூறப்பட்ட முறை எப்படி இருக்கிறதென்றல், ஒரு மலரிடத்தில் பழத்தின் தன்மையைப் புகுத்துவது போலிருக்கிறது. புஷ்பமானது எப்பொழுதும் எதிர்பார்த்தவண்ணமே தன்னை விகசித்துக்கொண்டிருக்கவேண்டும். சூரிய வெளிச்சத்திற்கும், காற்றுக்கும் அஃது எதிர்பார்த்தவண்ணம் இருக்கவேண்டும். புஷ்பம் எப்பொழுதும் ஆச்சரிய உலகத்திலேயே வசித்துக்கொண்டிருக்கவேண்டி யிருக்கிறது. ஆனல் பழமோ, தன்னுடைய விதை பழுக்க வேண்டியதின் பொருட்டு, தன் இதயத்தை மூடிக்கொள்ளவேண்டி யிருக்கிறது. புஷ்பத்திற்கு ஒரு தேனீ வந்து அதனிடையே அமர்ந்தால், அதற்கு அஃது ஒரு விசேஷ சம்பவமாகும். ஆனல் பழத்திற்கோ அத்தேனீ வந்து உட்புகுந்தால் தீங்கு நேரிடும். பெரியவர்கள் மனது பழத்தின் மனது போன்றதாகும். அதற்கு புஷ்ப மனதின்மீது அநுதாபம் கிடையாது. பழமானது தன்னைப்போல் புஷ்ப மனதையும் மூடிவிட்டால், அப்பொழுதே அது விருத்தியடையும் என்று கருதுகிறது. பெரியவர்கள் செய்யும் கொடுமையினுல் குழந்தைகள் பலவிதமாகக் கஷ்டப்படுகிறார்கள்.

இப்பொழுதுள்ள கல்வி முறைப்படி குழந்தைகள் வகுப்புக்குள் வந்த பிறகு, அங்கு எவ்வித ஆச்சரிய சம்பவங்களும் நிகழ்வதில்லை. தினந்தோறும் காலையில் குறித்த ஒரு நேரத்தில் பள்ளிக்கூடத்துக்குப் போகவேண்டும்; குறித்த ஒரு வகுப்புக்குள் நுழையவேண்டும்; ஒரே உபாத்தியாயரால் சொல்லப்படும் ஒரேவிதமான பாடத்தைக் கேட்க வேண்டும். குறித்த ஒரேநேரத்தில் பள்ளிக்கூடத்தினின்றும் வெளிவர வேண்டும். விடுமுறை நாட்கள் நெடு நாட்களுக்கு முன்னரே குறிக்கப் பட்டிருக்கின்றன. வயது வந்தவர்கட்கு இம்முறை சரிதான். எல்லாம் ஒழுங்காக நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன. ஒரு வியாபாரி, ஒழுங்காகவும் முறை பிசகாமலுமிருந்தால் நல்ல லாபம் கிடைக்கும் என்பது உண்மையே. ஆனல் பிள்ளைகள் எல்லாவித லாபத்தையும் எதிர்பார்ப்பதற்கில்லை. அவர்கட்கு ஏற்கனவே ஏற்படுத்தப் பட்டுள்ள முறைப்படி பாடங்கள் நடந்து கொண்டுவருகின்றன. தான் இங்ஙனம் கஷ்டப்படுவதானுல் தனக்கு உண்டாகும் நன்மை இன்னதென்று அப்பிள்ளைக்குத் தெரிவதில்லை. வருஷ முடிவில் பரீட்சை நடக்கிறது. பிறகு கஷ்டப்பட்டுப் படிக்கும் பிள்ளைகள் போதிய புள்ளிகள் பெருமற்போனல் அவர்களுக்கு வெகுமதி கிடைப்பதில்லை. இங்ஙனம் குழந்தைகளின் மனதைப் பக்குவப்படுத்துவது கொடிய அடிமை முறையைக் கையாளுவதைப் போலாகும். இங்ஙனம் செய்யப்படுவதனுல் பிள்ளைகளின் ஒழுக்கநிலை கெடுகிறது.

இம்முறையில் ஏதேனும் நன்மையுண்டா? அமைதியின்மை அல்லது எப்பொழுதும் சுறுசுறுப்பா யிருத்தல் என்ற இறக்கைகளோடு கூடிய குழந்தைகள் மேலே கூறப்பட்ட கூட்டில் அடைக்கப்பட்டுவிட்டால் பெரியவர்களாகிய நாம் அதிக தொந்தரவினின்றும் நீங்கிவிடுகிறோம். ஆனல் அக்குழந்தைகளின் மனதில் தோன்றியிருக்கும் சுதந்திர உணர்ச்சியை, புதிய புதிய விஷயங்களைக் கிரகிக்க வேண்டுமென்ற ஆவலைக்கொன்று விடுகிறோம். ஒரு மனதின் தன்மை விசாலிக்கவேண்டுமானுல், இந்த சுதந்திர உணர்ச்சி அவசியம் வேண்டற்பாலதாகும். ஆனல் நாம் குழந்தைகளிடத்தில் இயற்கையாகவே அமைந்துள்ள, தாமாகவே விஷயங்களைக் கிரகிக்கும் ஆற்றலை அழித்து விடுவதனுல் அவைகளின் உள்ளத்தையே நாம் கொன்றுவிடுகிறோம்.

பிள்ளைகள் பழகுவதில் கூட எவ்விதத் தடைகளும் இருக்கக் கூடாது. பொதுவாகக் குழந்தைகள் தங்கள் தாய்மாரோடு—அவர்கள் அதிக வயதானவர்களா யிருந்த போதிலும் அதிக உரிமையுடன் பழகுகின்றன. தாய்மனமும் குழந்தைமனமும் ஒன்று படுகின்றன. குழந்தைகளுக்குத் தாயார் ஒரு தோழனகவே விளங்குகிறாள். இயற்கையால் அளிக்கப்பட்ட அன்பைத் தாயார் பூரணமாகத் தன் குழந்தைகளுக்கு அளிக்கவேண்டு மென்பது என் விருப்பம். ஆதலின் தாய்மாரிடமிருந்து பிரிந்துவந்த குழந்தைகள், தங்கள் ஆசிரியர்களிடத்தில் தங்கள் அன்புரிமையைப் பாராட்ட வேண்டுமென்று நான் விரும்புகிறேன்.

பிள்ளைகளுக்குப் பாடம் கற்றுக் கொடுக்க வேண்டுமானுல், தாய்களும் பிள்ளைகளாக இருக்கவேண்டு மென்பதை, ஆசிரியரிற் பெரும்பாலோர் மறந்து விடுகிறார்கள். மற்றும் உபாத்தியாயர் பலர், கௌரவம் பார்க்கிறார்கள்; தாங்கள் படித்தவர்களானபடியால், அதற்குரிய பாவனைகளையும், நடைமுறைகளையும் மாணவர்களுக்குப் புகட்டுகிறார்கள். நமது தற்காலப் பள்ளிக்கூடங்களில் ஒருவித வளர்ச்சி இல்லை. பள்ளிக்கூட கட்டடம் பிள்ளைகள் தங்கியிருப்பதற்குத் தகுந்தபடி கட்டப்பட்டிருக்கிறது. ஆனல் தங்களை அடைத்து வைத்திருக்கும் ஒரு கூடு என்று பள்ளிக்கூடத்தைப் பிள்ளைகள் கருதக் கூடாது. கல்வியாகிற கட்டடத்தை எழுப்புவதில் மாணவர்களுக்கும் பங்கு இருக்கவேண்டும். தங்களுக்குச் சொந்தமான, தங்களால் நிர்மாணிக்கப்பட்ட ஓர் இடத்தில் தாங்கள் வசிப்பதாக மாணவர்கள் உணர வேண்டும்.

பிள்ளைகளை ஒழுங்காக நடத்துகிறவர்களென்று பெருமைப் படுத்திக் கொள்ளும் ஆசிரியன்மார்கள். தங்களுடைய கொடுமையை பிரயோகப் படுத்த சிறியபிள்ளையை கருவியாக உபயோகப்படுத்துகிறார்கள். ஆசிரியன்மார்களுக்கு அநுதாப உணர்ச்சியும், பிறருடைய மனோ நிலையை அளந்துகொள்ளும் ஆற்றலும் வேண்டும். தாமும் குழந்தைகளாகவேண்டும். குழந்தை உணர்ச்சி இல்லாத எவரும் குழந்தைகளைப் பயிற்சி செய்யும் உபாத்திமைத் தொழிலை ஏற்றுக் கொள்ளக் கூடாது.

---

## அமராவதி புதூர்

### வாலிபர் சங்க ஆண்டு விழா

அமராவதி புதூர் வாலிபர் சங்கத்தின் முதலாவது ஆண்டு விழா 16–12–37-ந் தேதி திரு. எல். கிருஷ்ணசாமி பாரதி, எம். எல் ஏ. தலைமையில் நடைபெற்றது. ஸ்ரீமதி பாரதியார் (எம். எல். ஏ.) தேசியக் கொடி ஏற்றுவித்தார். தலைவர் முன்னுரைப் பிரசங்கத்தின் பின் சுமார் 600 பேர்கட்கு சிற்றுண்டி வழங்கப் பட்டது. அப்பால் மாலை 4–30-க்கு திரு. லட்சுமிரதன் பாரதியார் தலைமையில் கூட்டம் நடந்தது. திரு. பொ. திருகூடசுந்தரம் அவர்கள் கருத்தடைபற்றி பேசினர்.

## செட்டிமார்நாட்டு விமான யுத்தவீரருக்கு பாராட்டு

### செட்டியார்கள் நலஉரிமைச் சங்கம்

காரைக்குடி, 26.

செட்டிமார்நாட்டு விமான யுத்த வீரர் தோழர் புதுவயல் சி. வீர. ராம. வீரப்ப செட்டியாரவர்கள் ஸ்பெயின் யுத்தத்தில் கலந்துகொண்டு ஆற்றிய வீரச்செய்கைகளைப் பாராட்டும்பொருட்டு செட்டியார்கள் நல உரிமைச் சங்கத்தாரால் நியூடவுன் மணிவிலாஸ் மாளிகையில் தேவகோட்டை குமார ஜெமீந்தார் AL. AR. சோமனுதன் செட்டியாரவர்கள் தலைமையில் பாராட்டுக் கூட்டம் இன்று மாலை 5 மணிக்கு நடைபெற்றது. திரு. வீரப்பா அவர்கள் ஸ்பெயினில் நடக்கும் யுத்த நிகழ்ச்சிகளையும் அதில் தாம் செய்த தொண்டுகளையும் தமக்கு நேர்ந்த விபத்துக்களையும் தனது உறுதியான கொள்கைக்காக ஜனநாயகக் கக்ஷியின் சார்பாக போர் புரிந்ததையும் மேல்நாட்டில் தனக்குள்ள ஆராய்ச்சி அநுபவங்களையும் மிக்க உணர்ச்சியுடன் விரிவாக ஆங்கிலத்தில் அழகாகக் கூறியதோடு தாம் தாய்நாட்டிற்காக எவ்விதத் தியாகமும்செய்ய சித்தமாக இருப்பதாகவும் கூறினர்கள் இதை A. முத்துசிவம் அவர்கள் தமிழில் எடுத்துரைத்தார்கள். தலைவரவர்களின் நீண்டதோர் முடிவுரைக்குப் பின்னர் சங்கத் தலைவர் ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியாரவர்களால் வீரப்பா அவர்களின் விளையாட்டின் திறமையையும் உடல் வலிமையையும், மனஉறுதியையும், வீரத்தையும் பாராட்டி யாவருக்கும் வந்தனோபசாரம்கூற கூட்டம் முடிவுற்று இரவு 8 மணிக்கு சங்க நிலையத்தில் திரு. வீரப்பா அவர்கட்கு விருந்தளிக்கப்பெற்றது என்று காரியதரிசி அறிவிக்கிறார்.

---

## ஆவினிப்பட்டியில்

### பிரிவுபசாரக் கூட்டம்

19–12–37-ந் தேதி மாலை பர்மா செல்லும் தோழர் நீலாவதி, ராமசுப்ரமணியம் தம்பதிகட்கு ஆவினிப்பட்டி விவேகானந்தக் கல்விக் கழகத்தில் ஒரு பிரிவுபசாரம் நடத்தப்பட்டது.

# விளம்பர விநோதம்

————திரு. ஆர். வி. ராமன்————

தமிழ் பாஷையே இப்பிடித்தான் போல் இருக்கு. அர்த்தம் அனர்த்தம் ஆகிவிடுகிறது. பாருங்கள் "கவி" என்பதற்கு எத்தனை அர்த்தங்கள். நாம் நல்ல அர்த்தம் கொண்டாலும் கூட பிறர் அப்படி இல்லையே. படியுங்கள் அர்த்தம் அனர்த்தம் ஆகிற விதத்தை.

"ஐந்து வருடம் உத்திரவாதம்" ஆயிரக்கணக்கானவர் உபயோகிக்கும் பவுண்டன்பேனா இது ஒன்றே. இது இல்லாத வீடே கிடையாது. ஏன், உங்களுக்கு ஒன்று. விலையும் சரசம், ரூபாய் ஒன்றரைதான்.

பென் அண்டு கோ.

என்ற விளம்பரத்தைக்கண்ட ஒரு போக்கிரி மனுஷன் என்ன செய்தான் தெரியுமா? பணத்தைக் கொடுத்து ஒரு பேனா வாங்கி திருப்பித் திருப்பிப்பார்த்தான். அப்பொழுது கடைக்காரன் "தாங்கள் சந்தேகமே படத் தேவை இல்லை, ஐந்து வருடம் உத்திரவாதம்" என்று சொல்லிவிட்டு விளம்பரத்தையும் காட்டினான். பேனா வாங்கப்போன மனுஷன் "அப்படியா?" என்று சொல்லிவிட்டு தெருவில் போய்க்கொண்டிருந்த நான்கு பேரைக் கூப்பிட்டு ஒரு துண்டு கடிதத்தை எடுத்து எல்லோரையும் ஒரே சமயத்தில் பிடித்துக்கொள்ளச்சொல்லி அவர் அவர்கள் எழுத்துக்களைப் போட்டுப் பார்க்கச்சொன்னான். ஆளுக்கு ஒரு புறம் இழுத்து பேனா காலியாய்விட்டது. உடனே அந்த ஆள் கடைக்காரனைப்பார்த்து "ஏனப்பா, நான்கு பேருக்கே இந்த பேனா தாளவில்லையே, ஆயிரம்பேருக்கு எங்கே தாளப் போகிறது? சரி போனால்போறது வருஷம் இன்னும் ஐந்து ஆகவில்லை. வேறு பேனா கொடு" என்று பேனாவை நீட்டினான்.

* * *



என்ற விளம்பரத்தை ஓர் சினிமாப் பத்திரிகையில் பார்த்த எங்கள் கோபு அன்றுதான் செல்ப்ஷேவ் செய்துகொண்டு இருந்தான். அவ்வளவுதான் இரண்டு குட்டிக்கரணங்கள் போட்டுக்கொண்டு அதிகமுக வெட்டுடன் கிளம்பி விட்டான் தமிழ் சமூகப் படத்தில் நடிக்க.

* * *

ஹோட்டலில் நான் போய் சாப்பிட்டுவிட்டு பில்லை கொடுத்து பணம் நாளைக்குத் தருகிறேன் என்றேன். ஹோட்டல்காரன் "தயவு செய்து கடன் சொல்லாதீர்கள்" என்ற எழுத்துக்களைக் காண்பித்தான். சரி என்று நான் ஒரு துண்டுக் கடித்தில் கடன் மூன்று அணாவையும் நாளைக்குத் தருகிறேன் என்று எழுதி காண்பித்து, பிறகு அதை கிழித்து எறிந்துவிட்டு நடையைக் கட்டினேன்.

* * *



பாருங்கள் எவ்வளவு சங்கடங்கள். இதையெல்லாம் பார்த்துக்கொண்டு நான் எப்படி சும்மா இருப்பது? சரி நம்மாலானதைச் செய்வோம் என்று ஓர் சங்கம் ஆரம்பித்தேன். அதற்கு "தமிழ்ச் சங்கம்" என்று தான் பெயர் வைத்தேன். தமிழ் பாஷையை சீர்திருத்துவதே அச்சங்கத்தின் நோக்கம். அதற்காக ஓர் இடத்தை வாடகைக்கு எடுத்துக் கொண்டேன். அதற்கு மெம்பர்களைச் சேர்க்கவேண்டுமல்லவா? அதற்காக அக்கட்டிடத்தின் வாயலில்,

தமிழ்ச் சங்கம்.

மேற்படி சங்கத்தின் அங்கத்தினராக விரும்புவோர், கீழ்கண்டவரிடம் விண்ணப்பித்துக் கொள்ளவும்.

இப்படிக்கு,
ந. அனுமந்த ராவ்,
காரியதரிசி.

என்று ஓர் போர்டு எழுதிமாட்டினேன்.

மறுநாள் சங்கத்தின் உள்ளிருந்த நான் வெளிவந்து வாயலில் நின்றேன். அப்பொழுது ஒருவர் நான் போட்டிருந்த போர்டின் கீழ் நின்றுகொண்டு ஏதோ தேடிக்கொண்டிருந்தார். "என்ன ஸார்! என்ன கெட்டுப்போச்சு" என்று வினவினேன். அதற்கு "ஒன்றுமில்லை, கீழ்க்கண்டவரிடம் விண்ணப்பித்துக் கொள்ளவும் என்றிருக்கிறதே! இதன் கீழ் யாரையுங்காணோமே என்று பார்க்கிறேன்" என்றார்.

"ஏன் இந்தப்பெயர்" என்றுகேட்டேன். "ஓஹோ அப்படியா? கீழ் கண்ட பெயர் உள்ளவரும், என்றல்லவா இருக்கவேண்டும்" என்றார். நான் திருடனை தேள் கொட்டினால் போல் விழித்தேன். திருடன் அவன் அப்பாவுக்கு கொடுக்குதானே.

———

மோஞ்ஞோ
இந்தியர் சங்கம்

19-12-37-ந் தேதி இரவு 8-30 மணிக்கு மீன்லா உயர்திரு நா. பழநியப்பா அவர்கள் தலைமையில் ஓர் பொதுக் கூட்டம் நடைபெற்றது. பொதுஜனங்கள் எல்லோரும் மஹாத்மா காந்தி அடிகளின் உடல் நலன் பெற சபையோர்கள் ஐந்து நிமிடம் கடவுள் பிரார்த்தனை செய்தனர்.



நம்பிக்கையில்லா தேர்தல் அதிகாரி

# திருப்பத்தூர் தாலூகா காங்கிரஸ் கமிட்டித் தேர்தல் செல்லாது

## சட்டத்திற்கும் ஒழுங்கிற்கும் விரோதமானது

## மறு தேர்தல் நடத்தவேண்டும்

திருப்பத்தூர் தாலூகா காங்கிரஸ் கமிட்டியின் சார்பான தேர்தல் 26-12-37 யன்று நடைபெறுமென்று தேர்தல் அதிகாரி அறிவித்திருந்தார். தேர்தல் அதிகாரி திரு. R. V. ஸ்வாமிநாதனிடம் தங்கட்கு நம்பிக்கை இல்லை என்றும் வேறு தேர்தல் அதிகாரி கொண்டு திருப்பத்தூர் தாலூகா கமிட்டித் தேர்தலை நடத்தவேண்டுமென பல அபேக்ஷகர்கள் மனுச் செய்து கொண்டதன் மூலம் தமிழ் நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் தேர்தலை 29-12-37-க்கு தேதி ஒத்திவைக்கும்படி தந்தி மூலமும், கடித மூலமும் திரு. R. V. ஸ்வாமிநாதன் அவர்கட்கு அறிவித்திருந்தார். எனவே அபேக்ஷகர்கள் பலர் சேர்ந்து 26-12-37-ல் தேர்தல் நடைபெறுதென்று துண்டு பிரசுரம் போட்டிருந்தனர். ஆனால் தேர்தல் அதிகாரி சிறிதும் தலைவர் கட்டளையை மதிக்காமல் எதேச்சாதிகாரமாக அவரிஷ்டப்படியே 26-12-37-ல் சட்டத்திற்கும், ஒழுங்கிற்கும், வழக்கத்திற்கும் முற்றும் மாறுபாடாக தேர்தலை நடத்தி முடிவையும் அறிவித்துவிட்டார்.

அவர் நடத்திய தேர்தல் செல்லுபடியாகாதது என்பதற்கு முக்கியமான சில காரணங்கள்:—

1. காங்கிரசின் அடிப்படையான கட்டுப்பாட்டைக் குலைக்கும் முறையில் மாகாணக் கமிட்டித் தலைவரின் கட்டளைக்கு விரோதமாக 26-12-37-ல் தேர்தல் நடத்தியது.

2. காங்கிரஸ் மெம்பர்கள்தானா என்று சரி பார்த்து கூட்டத்தில் ஆட்கள் அனுமதிக்கப்படவில்லை. காங்கிரசில் மெம்பரேயல்லாத பலர் கூட்டத்தில் கலந்து கொண்டிருக்கின்றார்கள்.

3. தேர்தல் நடைபெறும் இடம் எதுவென்று கண்டு நோட்டீசே போடப்படவில்லை.

4. தேர்தல் நடைபெறும் விஷயமான நோட்டீஸ் தாலுகா காங்கிரஸ் கமிட்டிக்கும், தாலுகாவில் உள்ள கிராமக் காங்கிரஸ் கமிட்டிகளுக்கும் கொடுக்கப்படவில்லை.

5. இதனால் ஏராளமான காங்கிரஸ் அங்கத்தினர்கள் தேர்தலில் கலந்துகொள்ள முடியாது போயிற்று.

6. காலங் கடந்துவந்த அபேக்ஷகர்கள் பாரம் நிராகரிக்கப்பட வேண்டும் என்று நியாயமும், மாகாணக் கமிட்டித் தலைவரின் கட்டளையும் இருக்கின்றன. அப்படியிருந்தும் அவற்றையும் தேர்தலில் எடுத்துக் கொள்ளப்பட்டு தேர்ந்தெடுக்கவும் பட்டிருக்கின்றது.

7. அபேக்ஷகர்களின் பெயரை அகர வரிசைப்படி ஓட்டுக்கு விடவில்லை. தமது கட்சியைச் சார்ந்தவர்களின் பெயர்களையே முதன்முதலாக ஓட்டுக்கு விடப்பட்டிருக்கின்றன.

8. ஓட்டெடுத்த முறை இதுவரை உலகில் எங்கனுமே காணாத அற்புதமாக இருக்கின்றது. வந்திருந்தவர்களை உத்தேசமாக 500 என்று கணக்கிட்டுக்கொண்டனர். அதன் பிறகு ஒருவர் பெயரைப் பிரேரேபித்து இவருக்குப் பாதகமாக யார் யார் இருக்கின்றார்கள் என்று கேட்டு, பாதகமாக இருப்பவர்களை 500-ல் கழித்துக்கொண்டு பாக்கியை சாதகம் எனக் கணக்கிட்டுக் கொண்டார்கள். நடுநிலைமை வகிப்பவர்கள் உண்டா இல்லையா என்றுகூடக் கணக்கிடப் படவில்லை.

9. வேறு இடங்களில் ஜில்லாக் கமிட்டி அங்கத்தினர் ஸ்தானத்திற்கு நின்று வெற்றியும் பெற்றவர் பெயரை இங்கு மறுபடியும் அதே ஸ்தானத்திற்கு பிரேரேபிக்கப்பட்டது.

இதுபோன்ற எண்ணற்ற அக்கிரமங்களை எல்லாம் கொஞ்சமும் அஞ்சாது நீதிக்கும், சட்டத்திற்கும், தலைவர் கட்டளைக்கும் முற்றும் முரணாக நடத்திய இத்தேர்தல் செல்லத் தக்கதில்லை என்றும் மற்றொரு தேர்தல் நடத்த உத்தரவாகவேண்டும் என்னும் முறைக்கு விரோதமாக நடந்த தேர்தலில் கலந்துகொள்ளாத அபேக்ஷகர் பலர் மேலதிகாரிகட்கு விண்ணப்பஞ் செய்துகொண்டிருக்கின்றனர்.

—ஒரு நிருபர்.



## திரு. ஆர். வி. ஸ்வாமிநாதன்மீது நம்பிக்கையில்லை

தலைவருக்கு அபேட்சகர் கடிதம்

திரு. சி. என்.
முத்துரங்க முதலியார் அவர்கள்,
தலைவர், த. நாடு கா. கமிட்டி,
சென்னை.

இதனடியில் கையொப்பமிட்டிருக்கும் காரைக்குடி நகர காங்கிரஸ் கமிட்டி திருப்பத்தூர் தாலுகா காங்கிரஸ் கமிட்டியின் சார்பாக நகர தாலுகா ஜில்லா கமிட்டி ஸ்தானங்களுக்கு அபேக்ஷகர்களாகிய நாங்கள் எழுதிக் கொண்ட மனு.

எங்கள் காரைக்குடி ஜில்லா காங்கிரஸ் தேர்தல்களுக்கு அதிகாரி

யாக நியமிக்கப் பெற்றிருக்கும் திரு. R. V. சாமிநாதன் அவர்கள் தற்பொழுது நடந்தவரையுள்ள தேர்தல்களில் பகிரங்கமாக ஒரு கட்சிச் சார்புள்ளவராய் நடந்து கொண்டதுடன் தாமே ஓட்டர்களிடம் சென்று வாக்கு சேகரித்தும் வந்திருக்கின்முர்.

இனியும் இவரையே தேர்தல் அதிகாரியாகக் கொண்டு நடத்தும் எலக்ஷன்கள் ஒருதலைப் பக்ஷமுள்ள தாயும் நீதிக்கு முரண்பட்டதாயும் இருக்குமென்பதைத் தெரிவித்துக் கொள்ளுகின்ருேம்.

சமீபத்தில் நடந்த தேர்தல்களில் கலகம் செய்தாவது ராய. சொ. போட்டியிட்ட கோட்டையூர் தொகுதியில் அவருக்கு மெஜாரிட்டியாயுள்ள பூத்தில் தேர்தல் நடக்கவிடாதபடி தடுத்து விடுவதென்று முன்னேற்பாட்டுடன் வந்திருந்தனர் என்பதற்கு போதிய சாக்ஷியம் இருக்கின்றது.

நகர தாலுகா கமிட்டித் தேர்தல்களுக்கு அபேட்சகர்களிடம் பூரம் பெற்றுக்கொள்ளுவதற்கு கடைசி நேரம் குறிப்பிடாமலும், எந்தத் தொகுதியில் அவருக்குப் பிடிக்காத அல்லது மாறுபட்ட நோக்கமுள்ள வர்களுக்கு எதிர்ப் பாரம் விழாமல் இருக்கின்றதோ, அந்தத் தொகுதியில் அவருக்குப் போட்டியாக ஒருவரை தாமே முயன்று நிறுத்தி அவரிடம் இரவு 12 மணிக்குப் பாரம் பெற்றுக்கொண்டும் இருக்கின்முர். இன்னும் இவை போன்ற எண்ணற்ற நீதியற்ற செயலெல்லாம் நெஞ்சஞ்சாது செய்யும் இவரை, இன்னும் எலக்ஷன்களை தொடர்ந்து நடத்தும்படி செய்தால், உண்மையும் ஒழுங்கும், ஓடி ஒளிவதைத் தவிர, வேறு வழியே இல்லை. எனவே, தயவு செய்து ஒரு கட்சி சார்புள்ள திரு. R. V. சாமிநாதன் அவர்களை தேர்தல் அதிகாரியாக இராதவாறு கட்சி சார்பற்ற வேறொரு ஜில்லா வாசியை யாரவது ஒருவரை நியமிப்பதுடன், தற்பொழுது அவர் குறிப்பிட்டபடி தேர்தல்கள் நடைபெறுதவாறு உத்திரவிட வேண்டு மென்று கேட்டுக் கொள்கிறோம்.

அபேக்ஷகர் சிலரால் உடனே தேர்தல் அதிகாரி கொடுத்த லெட்டருக்கு நகல் ஒன்றை இத்துடன் அனுப்பி இருக்கின்றோம்.

சா. கணேசன்.
எம். பழனியப்பன்.
வ. பீ. கா. சையது முகம்மது ராவுத்தர்.
ஆரு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார்.
சு. மு. பழ. நாச்சியப்ப செட்டியார்
கே. கே. என். லெட்சுமணன்.
ராய. சொக்கலிங்கம்.
S. வச்சிரவேலு.
சி. ஆ. ெ. மெய்யப்பனம்பலம்.
லெ. கருப்பண்ணன்.
அரு. அருணசலன்.
அ. கா. அல்லா பிச்சை.
கெ. மு. லெ. மெய்யப்பனம்பலம்.

## தேவகோட்டை தேர்தலில் ஒழுங்கீனம்

### தேர்தல் அதிகாரி ஸ்ரீமான் சுவாமிநாதன்மீது நம்பிக்கையில்லை

தேவகோட்டை காங்கிரஸ் வாதி ஒருவர் பின் வருமாறு எழுதுகிறார் :-

20—12—37-ல் காங்கிரஸ் பிரதிநிதி தேர்தல் நடந்தது. நடக்குமிடம் முன்கூட்டி வெளியிடப்படவில்லை. ஒழுங்கான முறையில் தேர்தல் நடத்த ஏற்பாடு செய்யவில்லை. தேர்தல் விதிகள் எல்லாம் மீறப்பட்டன.

அதன் காரணமாக அபேக்ஷகர்கள் அறுவரில் நால்வர் ஆட்சேபித்து விலகி நின்றும் தேர்தல் அதிகாரி ஸ்ரீமான் R. V. சுவாமிநாதன் ஏதேச்சாதிகாரமாக தேர்தலை நிறுத்தாது நடத்தினர்.

ஆட்சேபித்த அபேட்சகர் நால்வரும் மாகாணக் கமிட்டி தலைவருக்கு, தேர்தலை நிறுத்துமாறு தந்தி கொடுத்து ஆட்சேப மனுக்களும் அனுப்பியிருக்கிருர்கள்.

25—12—37-ல் நகரக்கமிட்டி, ஜில்லாக் கமிட்டி தேர்தல் சினிமாக் கொட்டகையில் நடக்குமென்று, அதற்கு ஒரு நாளுக்கு முன்பு வெளியிட்டார். அவர் 20—12—37-ல் தேர்தல் விதிகளுக்கு மாருகவும் ஒரு கட்சி சார்பாகவும் நடந்து கொண்டதால், 25-ந் தேதி தேர்தலையும் ஒழுங்காய் நடத்தமாட்டார் என்ற எண்ணம் காங்கிரஸ் வாதிகள் பெரும்பாலோர் மனதிலும் உண்டாய் விட்டது.

ஆதலால் காங்கிரஸ் கமிட்டி மெம்பர்களும், உத்யோகஸ்தர்களும், அபேக்ஷகர்களுமாக 30 முப்பது பேர் தேர்தல் அதிகாரியிடம் நம்பிக்கையில்லை. தேர்தலை நடத்தக்கூடாது என்று முன் கூட்டி அறிவித்தார்கள். மாகாணத் தலைவருக்கும் கடிதம் எழுதினர்கள்.

ஆயினும் தேர்தல் அதிகாரி 25உ காலை தேர்தல் நடத்த ஆரம்பித்தார். தேவகோட்டையில் காங்கிரஸ் மெம்பர்கள் 1781. ஆனல் அப்பொழுது அங்கு வந்திருந்தவர்கள் சுமார் 250 ஜனங்கள். அவர்களில் நூறு பேரே தேர்தலில் கலந்து கொண்டார்கள்.





அந்த நாறு பேரிலும் காங்கிரஸ் மெம்பர்கள் ஐம்பது பேருக்கு மேலிராது. அந்த ஐம்பது காங்கிரஸ் மெம்பர்களும் 20—12—37ல் அக்கிரமமாய் தேர்தல் அதிகாரி நடத்திய தேர்தலில் வெற்றி பெற்ற கட்சியைச் சேர்ந்தவர்கள். பாக்கி 150 பேர்களும் எலக்ஷன் நடத்தக்கூடாது என்று சொல்லி விட்டு ஒதுங்கி நின்முர்கள்.

ஸ்ரீமான் கரு. முத்து சிவலிங்கமும் ஸ்ரீமான் சித. மு. மாரியப்பாவும் தேர்தல் அதிகாரிக்கு பக்க பலமாக இருந்தார்கள். ஸ்ரீமான் சிவலிங்கம் அபேட்சகர்கள் பெயரை வாசிப்பார். ஸ்ரீமான் மாரியப்பா 'அந்த' அபேட்சகருக்கு ஓட்டுப்போட கைதூக்கலாமா தூக்கக்கூடாதா என்பதை சைகை காட்டுவார். அதை ஆண்டவன் அபயகாரமாக மதித்து ஓட்டர்கள் கைதூக்குவார்கள். தேர்தல் அதிகாரி கைகளை எண்ணுவார். இவ்விதம் தேர்தல் நாடகம் நடத்தி ஜில்லாக் கமிட்டிக்கும், தேர்தலில் கலந்துகொள்ள முடியாது என்று ஒதுங்கி நின்றவர்களையும் மெம்பர்களாக தெரிந்தெடுத்து விட்டதாக அறிவித்தார்.

இதுகேட்டு அப்படித் தெரிந்தெடுக்கப்பட்டதாக அறிவிக்கப்பட்ட நகரக்கமிட்டி மெம்பர்கள் 15 பேரில் 8 பேரும் ஏற்கனவே நகரக்கமிட்டி மெம்பர்களாக இருப்பவர்களில் 9 பேரும் மேற்படி தேர்தலை ஆட்சேபித்து, நகரக்கமிட்டி காரியதரிசிக்கு எழுதியிருக்கிருர்கள்.

26—12—37-ல் நகரக் கமிட்டியின் விசேஷக் கூட்டம் நடந்தது. அதில் மேற்படி தேர்தலை ரத்துச்செய்து வேறு தேர்தல் அதிகாரி நியமித்து ஒழுங்கான முறையில் ஏற்பாடு செய்யுமாறு மாகாணத் தலைவருக்கு வேண்டுகோள் செய்திருக்கிருர்கள்.

மாகாணத் தலைவர் நியாயம் வழங்குவார் என்று மகாஜனங்கள் ஆவலோடு எதிர்பார்த்து நிற்கிருர்கள்.

## குன்றக்குடியில் நடந்த தேர்தல் ஒழுங்கானதாகுமா?

திருப்பத்தூர் தாலுகா காங்கிரஸ் சபைக்கு தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய ஸ்தானம் 15-க்கும் காரைக்குடி ஜில்லாக் கமிட்டிக்கு தேர்ந்தெடுக்கப்பட வேண்டிய ஸ்தானம் மூன்றுக்கும் 26—12—37-ல் குன்றக்குடி அள. அரு. பங்களாவில் தேர்தல் அதிகாரி திரு. ஆர். வி. சுவாமிநாதன் அவர்கள் தேர்தல் நடத்தினர்கள்.

திருப்பத்தூர் தாலுகாவில் நான்கு அணு செலுத்திய ஆயிரக்கணக்கான காங்கிரஸ் அங்கத்தினர்கள் இருந்தும் 500 ஜனங்களே வந்திருந்தனர். காங்கிரஸ் அங்கத்தினர்களும் அங்கத்தினர் அல்லாதவர்களும் அதில் ஒரே கூட்டமாக கலந்திருந்தனர். அப்பொழுது தேர்தல் அதிகாரி அவர்கள் அங்கத்தினர் அல்லாதாரை தள்ளியிருக்கும்படி சொன்னர். ஆனல் அவர்களில் பெரும்பாலோர் தள்ளியிருக்கவில்லை. ஒரே கூட்டமாகத்தான் கூடியிருந்தார்கள். அதைப் பார்த்துக்கொண்டிருந்த திருப்பத்தூர் தேசாபிமானியாகிய திரு. மாணிக்கம் அவர்கள் காங்கிரஸ்காரர் அல்லாதாரை வெளியே போகும்படி செய்யவேண்டும், அதன் பிறகு காங்கிரஸ் அங்கத்தினர்கள் தானு என்பதை தெரிந்துகொண்டு தேர்தலை நடத்தவேண்டும் என்றும் தேர்தல் அதிகாரியிடம் சொல்லி ஆட்சேபித்தார். ஆனல் தேர்தல் அதிகாரி அதைப் பொருட்படுத்தாமல் தேர்தலை நடத்தினர். கூட்டத்தில் கைதூக்கி வாக்குக்கொடுக்கும் முறை அனுஷ்டிக்கப்பட்டது. காங்கிரஸ் அங்கத்தினர்களும் அங்கு வேடிக்கை பார்க்க வந்திருந்தவர்களும் குன்றக்குடி சுவாமி தரிசனம் செய்ய வந்திருந்தவர்களும் வாக்குக் கொடுக்க உரிமையற்ற பல காங்கிரஸ் அங்கத்தினர் அல்லாதாரும் தங்கள் கரங்களை தூக்கி தேர்தலில் கலந்துகொண்டது மிகவும் வேடிக்கையாகவும் நூதனமாகவும் இருந்தது. காங்கிரஸ் மகாசபையின் கொள்கையையும் திட்டத்தையும் மீறி நடப்பது சரியா?

பொது ஜனங்களிடம் நம்பிக்கையும் ஆதரவும் உள்ள உண்மையான காங்கிரஸ் வழியர்களைத் தேர்ந்தெடுப்பதற்காகவே காங்கிரஸ் மகாசபையால் தேர்தல் முறை ஏற்படுத்தப்பட்டிருக்கிறது. அதை முற்றிலும் தவறான முறையில் அனுஷ்டிப்பது ஒழுங்கானதாகுமா?

வாபஸ் வாங்கிய அங்கத்தினர்கள் நேரிலோ, அல்லது எழுத்து மூலமாகவோ அறிவிக்காமலிருந்தும், சிலர் வாபஸ் வாங்கிக்கொண்டதாக தேர்தல் அதிகாரி அறிவித்தார். அதன் உண்மை, தேர்தல் அதிகாரியால் வெற்றி பெற்றதாக சொல்லப்பட்ட ஒருவர் தோல்வி அடைந்ததில் இருந்தே தெரியவரும்.

அநேக சுற்று கிராமங்கள் நிறைந்த திருப்பத்தூர் தாலுகாவிலே குன்றக்குடியில் மட்டும் வாக்களிக்கும் இடமாக ஏற்படுத்தியதால், வாக்காளர்கள் பெரும்பாலோர் கலந்துகொள்ள இயலாமல் போய்விட்டது. குன்றக்குடியுடன் இன்னும் சில ஊர்களையும் வாக்குக் கொடுக்கும் இடமாக ஏற்படுத்தியிருந்தால், இன்னும் அதிகமான வாக்காளர்கள் கலந்து கொள்ள சௌகரியமாய் இருந்திருக்கும்.

ஒழுங்கான முறையில் தேர்தல் நடந்ததென்று என்னுவதற்கே இல்லை. ஆனதால் தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியார் கவனிப்பார்களாக என திரு. கா. அருணசலன் (கண்ட வாரயன்பட்ட) எழுதுகிருர்கள்.

## விமான யுத்த வீரருக்கு பாராட்டுரை*

செட்டிமார்நாட்டு விமான யுத்த வீரர் திருவாளர் பி.வீர.ராம.வீரப்ப செட்டியாரவர்கட்கு காரைக்குடி செட்டியார்கள் நலஉரிமை சங்கத்தார் படித்தளித்த பாராட்டுரை அடியில் வருமாறு:—

அன்புறு தோழரே!

தாங்கள் மேல்நாட்டில் புரிந்துவந்த வீரச் செய்கைகளை நாங்கள் மனமாரப் பாராட்டுகின்றோம்.

தாங்கள் மலாயா நாட்டில் பயின்ற ஆங்கிலக் கல்வியை முடித்துக் கொண்டு அந்நாட்டில் விளையாட்டுகளில் தங்கட்கு ஒப்பாருமிக்காருமில்லையென முதன்மை ஸ்தானம் அடைந்தும் இலக்கியக் கழகத்தில் தலைமை ஸ்தானம் வகித்தும் கேம்பிரிட்ஜ் சர்வகலாசாலை படிப்பை முடித்துக்கொண்டு இங்கிலாந்து சென்று ஆங்கிலத்தில் நடந்த பரீக்ஷைகளில் முதன்மை ஸ்தானம்பெற்றதனால் இந்தியன் சிவில் சர்வீஸ் துறையில் (I. C. S.) பயில்வதற்கு தகுதியுள்ளவர்களானீர்களென்பது மதித்து மகிழ்கின்றோம். அஃதுடன் பிரபல விளையாட்டாளரான ரீவ்-டேவிஸ் என்பவரை தோற்கடித்து ஜெயக்கொடி நாட்டினீர்களென்பதறிந்து தங்களின் விளையாட்டுத் திறமையைப் பெரிதும் மதித்துப் புகழ்கின்றோம்.

தாங்கள் இவ்விலாந்தில் தங்கள் இளம் பிராயத்தில் மூன்று ஆண்டுகள் வாழ்ந்ததன் பயனாக வெளிஉலக மாறுதலை அறிந்து பிரிட்டிஷ் அரசாங்கம் ஸ்பெயின் யுத்தத்தில் நடுநிலைமை வகிக்கும்போது தாங்கள் தங்கள் கொள்கைக்கு விரோதமான பாஸிஸ்ட் கொள்கையை எதிர்க்கு முகத்தான் ஸ்பெயின் யுத்த அரங்கத்தில் கலந்து போர் புரிவதற்காக சில நண்பர்களுடன் இவ்விலாந்திலிருந்து புறப்பட்டு யுத்தப்படையில் சேர்ந்து சில வாரங்கட்குள் சிறந்த பயிற்சி பெற்று ஸ்பெயின் (ஜனநாயகக் கக்ஷி) கவர்ன்மெண்டுக்கும் (ஜெனரல் பிராங்கோ) கலகப்படைக்கும் நடக்கும் யுத்தத்தில் ஜனநாயகக் கட்சியின் சார்பாகப் பங்கெடுத்துக் கொண்டு போர்புரிந்த தங்களின் தன்னலமற்ற கடமை புணர்ச்சியை பெரிதும் போற்றுகின்றோம்.

தாங்கள் விமானப்படையில் படைத்தலைவனாக (லெப்டினண்ட்) நியமனம்பெற்று கலகப்படையாருடைய நான்கு விமானங்களை கைப்பற்றியது கேட்டு இறும்பூதெய்துகின்றோம். அந்த யுத்தத்தில் தாங்கள் சில காயங்கள் அடைந்தும் தங்கள் விமானம் பழுதுபட்டும் 10000 அடியிலிருந்து விழுந்தும் விபத்திலிருந்து விடுபட்டதற்காக எல்லாம் வல்ல இறைவனை இறைஞ்சுகின்றோம்.

ஸ்பெயின் யுத்த அரங்கத்தில் பிரிட்டிஷ் இந்தியப் பிரஜைகள் கலந்து கொள்வது (சர்வதேச நடுநிலைமைக் கமிட்டிக்கு) விரோதமென்று பிரிட்டிஷ் ஸ்தானீகர் அறிவித்ததன் பேரில் தாங்கள் தங்கள் மன உறுதியை மாற்றிக்கொள்ள நேரிட்டதால் மார்பளபு ஜலமுள்ள தொட்டியில் பல மணி நேரங்கள் மறைந்து கொண்டு ஜிப்ரால்ட்டர் வந்து இங்கிலாந்துக்குச் சென்றீர்களென்பதறிந்து தங்கள் தைரியத்தையும் வீரத்தையும் பாராட்டுகின்றோம்.

தாங்கள் மேல்நாட்டில் ஆற்றிவந்த வீரச் செய்கைகள் நமது நாட்டுக் கோட்டை நகரத்தார் மரபினருக்கே உயர்ந்த பெருமையைத் தருகின்றது. எல்லாம் வல்ல இறைவன் தங்களையொத்த நமது சமூக வாலிப வீரர்களைக்கொண்டு எல்லாத் துறைகளிலும் முன்னணியில் நிற்கச் செய்ய வேண்டுமென்று மனமாரப் பிரார்த்திக்கின்றோம்.

நமது சமூகத்தில் தாங்கள் முதன் முதலாக யுத்த அரங்கத்தில் கலந்து வீரப்போர் புரிந்து சுகமுடன் நம் நாட்டுக்குத் திரும்பிவந்ததைப் பெரிதும் பாராட்டுவதுடன் நமது தாய் நாட்டு வருங்கால இயக்கங்களில் கலந்து முன்னணியில் வருவதற்கு தங்களுக்கு நீண்ட ஆயுளையும் திடகாத்திரத்தையும் நல்க எல்லாம் வல்ல முழுமுதற் கடவுளைப் பிரார்த்திக்கின்றோம்.

தங்களன்புள்ள,
செட்டியார்கள் நலஉரிமைச்
சங்கத்தார், காரைக்குடி



* செய்திக்கு பக்கம் 29 பார்க்க.



# சினிமாக் குறிப்பு

### வெண் திரையில் வந்தேமாதரம்

காட்சி முடிந்ததும் இரண்டு சினிமா கொட்டகைகளில் 'வந்தேமாதரம்' பாடப்படுகிறது. முதல் முதலாக இம்முறையைக் கையாண்டவர்கள் கல்கத்தாவிலுள்ள யுத்தரா தியேட்டர் காரர்களாவார்கள். இவ்வழியைச் சென்னைப் பாரகானும் பின்பற்றி இருக்கிறது.

### அஸ்வத்தம்மாவின் புதிய படம்

ராயல் டாக்கீசார் எடுக்கவிருக்கும் தமிழ் சக்குபாய் படத்தில் திருமதி அஸ்வத்தம்மாள் பிரதம நடிகையாவார். திரு. ஒய். வி. ராவ், அதை டைரக்ட் செய்வார்.

### மயூராவின் அடுத்த படம்

தேச முன்னேற்றம் என்னும் தேசபக்தி பொங்கித் ததும்பும் சமூகப் படம் ஒன்றை மயூரா பிலிம்சார் அடுத்த படமாக எடுக்க இருக்கிறார்கள்.

### சென்னையில் ஒரு புதிய பிலிம் கம்பெனி

ஹிந்துஸ்தான் பிலிம் கம்பெனி எனும் பெயருடன் சென்னையில் ஒரு புதிய கம்பெனி ஆரம்பிக்கப்பட்டிருக்கிறது. தெலுங்கு, தமிழ் ஆகிய இருமொழியிலும் படம் எடுப்பதாக இருக்கிறார்கள். பிரஹன்னளா என்னும் கதையை இருமொழியிலும் முதல் முதலாக எடுக்க இருக்கிறார்கள்.

### அரக்கன் பாடுகிறன்

சில இந்தியப் பாடகர்களும், நடனக்காரர்களும் ரோமில் சர்வாதிகாரி முசோலினியைச் சந்தித்தார்கள். அவர்கள் தகுந்த மரியாதையுடன் முசோலினியால் வரவேற்கப்பட்டார்கள். அங்கு அவர்கள் பாடிய பாட்டுகளையெல்லாம் முசோலினி நீண்ட நேரம் செவிமடுத்தார். பிறகு அவர் வேண்டுகோள்படி அப்பாட்டுகளின் பொருள் அவருக்கு உணர்த்தப்பட்டது. தனக்குப் பழக்கமில்லா இந்திய இசைக்கருவிகளை வாசிக்க முசோலினி முயன்றார். பிறகு, தான் தேர்ச்சிப்பெற்றுள்ள பிடிலை எடுத்து வரச்சொல்லி இந்திய ராகங்களுக்கேற்றவாறு வாசித்தார். முடிவில் இத்தாலிய கிராமியப் பாடல்களை பிடிலில் வாசித்துக் காட்டினார்.

### ஏனக்ஷி ராமராவின் 'அழியாக் காதல்'

அமர் பிரேம் அல்லது அழியாக் காதல் எனும் படத்தில் ஏனக்ஷி ராமராவ் பிரதம நடிகையாவர். அப்படத்தில் காஷ்மீர நகரத்தன் வனப்பையும், இடையறாது பனிக்கட்டிகள் பாயும் அமர்நாத் ஆலயத்தின் எழிலையும், இயற்கை அழகு மிக்க ஹிமாலயத்தின் காட்சிகளையும் காணக்கூடுமாம்.

---

ஜுபிடர் பிக்சர்ஸ்

ஏனோ பரிதாபம்
நண்பர்களே!

*



# டாக்டர் சுப்பிரமணியத்தின் ஒழுங்குத் தவறுன நடத்தை

## தலைவருக்கு திரு. லெட்சுமணனின் கடிதம்

திரு. C. N.
முத்துரங்க முதலியார் அவர்கள்,
தலைவர், த. நாடு கா. கமிட்டி,
சென்னை.

அன்புள்ள தலைவரவர்களே,

20-12-37-ந் தேதி காரைக்குடி காங்கிரஸ் மாளிகையில் நடந்த ஹரிபுரா காங்கிரஸ் பிரதிநிதி, நகரத் தொகுதி தேர்தலின்போது நான் போலிங் பூத்தில் நின்றுகொண்டிருந்தேன். இவ்வூர் டாக்டர் எஸ். சுப்பிரமணியம் அவர்கள் உள்ளே வந்திருந்தார்கள். நான் வாருங்கள் என்று கூறி சலாம் செய்தேன். உடனே அவர் கடூரமாக முகத்தை மாற வைத்துக்கொண்டு,

"என்னடா என்னை கேலியா செய்கிருய். உதைப்பேன்—அயோக்கியப்பயலே, இனிமேல் உன்னை உதைப்பேன். எங்கே கடைசிவரை எலெக்ஷன் நடப்பதை பார்க்கலாம். கலகம் செய்யத்தான் வந்தேன்—அயோக்கியப் பயல், அயோக்கியப்பயல்."

என்று மனிதத் தன்மையை இழந்து பேசினர்.

நான் காங்கிரஸ்காரனுனதாலும் ஒரு அபேக்ஷகனுனதாலும் எலக்ஷன் நின்றுபோகும்படியான முறையில் கலகம் நடவாதவாறு ஒன்றும் பதிலே பேசாமலிருந்துவிட்டேன்.

இச்சம்பவம் நடந்தபொழுது திருவாளர்களான,

சா. கணேசன்.

கெ. மு. லெ. மெய்யப்பனம்பலம்.

கி. ஆ. மெ. மெய்யப்பனம்பலம்.

லெ. கருப்பண்ணன்.

ஆறு. ஆ. ராம. சொக்கலிங்கம் செட்டியார்.

சுவாமி சிவப்பிரசாத்.

லெ. நடேசன்.

ஆ. கா. அல்லாப்பிச்சை அம்பலம்.

முதலிய பலர் ஸ்தலத்தில் விஷயத்தை கவனித்துக் கொண்டிருந்தனர்.

உடனே நானும் என்னுடன் அபேக்ஷகராய் நின்ற திரு. சா. கணேசனும் அப்பொழுது முக க்ஷவரம் செய்து கொண்டிருந்த எலெக்ஷன் ஆபீசரான திரு. ஆர். வி. சுவாமிநாதன் அவர்களிடம் விஷயத்தை விளக்கிக் கூறியிருக்கின்ருேம்.

அன்றியும் டாக்டர் சுப்பிரமணியத்திற்கும் எனக்கும் நண்பர்களான திருவாளர்கள், ஆர். ஜி. ரெங்கராமானுஜ அய்யங்கார், சு. கந்தசாமி பிள்ளை, எஸ். கோபாலன் முதலியவர்களிடம் கூறியதற்கு என்னுடைய பொறுமையான மௌனத்தைப் பாராட்டுவதாகவும் அதற்கு வேண்டிய பரிகாரம் செய்வதாகவும் கூறிச் சென்ருர்கள்.

இச்சம்பவத்தை தனிப்பட்டதாகவோ அல்லது சொந்தமானதாகவோ கருதக்கூடியதாயில்லை. இது காங்கிரஸ் மாளிகையில் போலிங் பூத்தில் எலெக்ஷன் காரணமாக ஏற்பட்டது. அப்பொழுது இவர் எந்த அபேக்ஷகருக்கும் போலிங் ஏஜண்டுமில்லை. அவர், ஏற்கனவே ஓட்டு விட்டதால் ஓட்டருமில்லை. இந்த நிலைமையில் உள்ளே வந்திருந்து கொண்டு கலகம் செய்து போலிங்கை நிறுத்திவிடவேணுமென்ற எண்ணத்துடன் மனிதத் தன்மையை இழந்து நடந்துகொண்ட டாக்டர் சுப்பிரமணியம் அவர்களின் கேவலமான செய்கையை விசாரித்து அவர் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுத்துக் கொள்ளவேண்டுமென்று பிரார்த்திக்கின்றேன்-

தங்கள் அன்புள்ள,
காரைக்குடி, 25-12-37. K. K. N. லெட்சுமணன்.

---

### இவ்வருஷத்து முக்கியப் படம்

சீனர்களின் நாட்டுப் பற்றைச் சித்தரித்துக் காட்டும் நல்லபூமி எனும் படம் டோகியோ மக்களால் இவ்வருஷத்து முக்கியப்படம் என்று புகழப்படுகிறது.

### அடுத்த மாதத்தில் வருகிருன்

நேஷனல் மூவிடோன் காரரால் வெகு காலமாக விளம்பரப்படுத்தப்பட்டதும், திரு. கே. பி. கேசவன், ராஜலட்சுமி முதலியவர்கள் நடித்ததுமான ராஜமோகன் அடுத்த மாதமத்தியில் கெய்டியில் காட்டப்பெறும். அவர்களுடைய அடுத்தப் படம் பஞ்சாப் கேசரியாகும். அதற்குக் கடந்த வெள்ளிக்கிழமை பிள்ளையார் குட்டும் குட்டிக் கொள்ளப்பட்டது. அவர்கள் முயற்சி வெற்றியளிக்குமாக,

### முகமூடி போடவா? ஆனல் உன் மனைவியாக இருக்க முடியாது!

பிரேக்ககரில் ஒரு தம்பதிகள் கடந்த ஆறு மாதமாக அவர்களிடையே பெருத்த சச்சரவு ஏற்பட்டுவிட்டது. தன் கணவனேடு கூடிவாழ முடியாதாம் அவளுக்கு. விவாகரத்து கோரி மனு போட்டுவிட்டாள். அவள் கோரும் விவாகரத்தில் ஆச்சரியம் இல்லை. ஆனல் அதற்கு அவள் கூறும் காரணந்தான் விசித்திரமானது. இரவில் படுக்கையில் விஷப்புகை முகமூடி அணிந்து கொள்ள வேண்டுமென்று தன் கணவன் ஆறுமாதமாக அவளை நிர்பந்தம் செய்கிருனும். அப்படி அவன் நிர்பந்திக்கக் காரணம் என்ன தெரியுமா? அவள் கணவன் கடந்த மகாயுத்தத்தில் இருமுறை விஷப்புகையில் சிக்கி அவதிப்பட்டவனும். அந்த பயத்தினுல்தான் தன்னை முகமூடி அணிய நிர்ப்பந்திக்கிருன் என்ருள் அம்மங்கை,



# திருச்சி 'பூச்சாண்டி'

## கவர்னர் மீது நம்பிக்கையில்லை

பெரிய காடு. ஒரு பயங்கர சிங்கம். உல்லாசமாக உண்டு களித்து ஒரு மர நிழலில் படுத்திருந்தது.

அந்தக் காடு வழியாக மூன்று சிறுவர்கள் போய்க்கொண்டிருந்தார்கள். அவர்களின் கண்ணில் சிங்கம் படுத்திருக்கும் காட்சி விழுந்தது. மிருகராஜன் தங்களைப் பார்க்கவில்லை என்பது அச்சிறுவர்கட்குத் தெரியும். அவர்களில் ஒருவன் 'ஆ, ஊ' என்று குதித்தான். "இதோ பார் சிங்கத்தைத் தொலைத்துவிடுகிறேன்" என்று துள்ளினுன். பக்கத்திலிருந்த இருவரும் பிடித்துக்கொண்டார்கள்.

சிறுவன் சிறிது நேரம் குதித்த பிறகு "நீங்கள் சமாதானம் செய்ததால் விட்டேன்; இல்லையானல் சிங்கத்தைத் தொலைத்தே விடுவேன்" என்ருனும். பாவம்! சிறுவனுக்கு இதிலொரு சந்தோஷம் போலும்.

* * *

இந்தக் கதைபோலிருக்கிறது திருச்சியில் நடைபெற்ற தமிழர் மகாநாட்டு நம்பிக்கையில்லாத் தீர்மானப் பூச்சாண்டி.

26-ந் தேதி ஸ்ரீ S. S. பாரதியாரின் தலைமையில் திருச்சி முனிசிபல் மண்டபத்தில் தமிழர் மகாநாடு நடைபெற்றது. திருநெல்வேலி கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் மகாநாட்டை திறந்துவைத்தார்கள். மகாநாட்டின் நோக்கம் 'தமிழர்' பெயரால் ஹிந்தியை எதிர்ப்பதாகும்.

மகாநாட்டில் சில தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. அவை யாவும் காங்கிரஸ் மந்திரிகளை எதிர்ப்பனவாகும். கடைசியாக ஒரு தீர்மானத்தை தோழர் ஈ. வே. ரா. பிரேரேபித்தார். அத்தீர்மானத்தில், சென்னைக் கவர்னர்மீது நம்பிக்கையில்லையென்றும், அவரை இந்தியா மந்திரி திருப்பி அழைத்துக்கொள்ள வேண்டுமென்றும் சொல்லப்பட்டிருந்தது.

அத்தீர்மானத்தை பிரேரேபித்ததும் கூட்டத்திலிருந்த சில பிரமுகர்கள்—கவர்னர் வீணுக கெட்டுவிடுவார் என்று கருதினர்கள் போலும்; அவர்கள்—தலையிட்டு தீர்மானத்தை வாபஸ் வாங்கிக்கொள்ள வேண்டுமென்று கேட்டுக்கொண்டார்களாம். அதனுல் மூன்று மணி நேரம் வாதம் நடந்ததாம். கடைசியில் தோழர் நாயக்கர் வாபஸ் வாங்கிக் கொண்டாராம். கிட்டத்தட்ட சிங்கத்தைத் தொலைத்துவிட முயன்ற சிறுவன் முயன்ற மாதிரி!

வாபஸ் வாங்கச்சொன்ன நண்பர்கள் விஷயாலோசனைக் கமிட்டியில் தீர்மானம் வருவதை அறியார்கள் போலும். ——— ஒருகால் விஷயாலோசனைக் கூட்டமே நடைபெறவில்லையோ என்னமோ?

போகட்டும். தோழர் நாயக்கர் கவர்னரைத் துரத்திவிட தீர்மானம் கொண்டுவந்தபோது, பேசிய பேச்சில், கவர்னர் தம் விசேஷ அதிகாரத்தை பிரயோகிக்கவில்லை என்று குறிப்பிட்டாராம். என்ன ஆச்சரியம் இது! விசேஷ அதிகாரமென்ருல், கவர்னர் தம் மனம்போல் தம் சௌகரியத்திற்காக உபயோகித்துக் கொள்வதா, அல்லது பிறரொருவர் சொல்ல அதற்காக உபயோகிப்பதா? பாவம்! கவர்னரின் சொந்த விசேஷ அதிகாரத்தில் ஒரு தமிழருக்கு எவ்வளவு உரிமை.

இந்த இந்தி எதிர்ப்புத் தமிழர்கள் கவர்னர் மீது நம்பிக்கையில்லை என்கிருர்கள்; ஆனல் அவர்களோ கடந்த தேர்தலில் தம் சொந்த தமிழர்களால் நம்பிக்கையில்லை என்று உதறித்தள்ளி ஒதுக்கப்பட்டார்களாவார்கள்.

அதே மனிதர்கள் இன்னும் ஒதுக்கப்பட்டுக் கொண்டுதான் இருக்கிருர்கள். அதற்கு சான்று காணவேண்டுவோர் காங்கிரஸ் அங்கத்தினர் ஜாபிதாவின் பெருக்கத்தைக் காண்க. எத்தனை ஆயிரவர்கள்! காங்கிரஸை ஆதரிக்கின்றனர்!

* * *

இவ்வாறு நாட்டில் பெரும்பாலாரின் பிரதிநிதிகளாய் விளங்கி ஆட்சி செலுத்தும் கா. மந்திரிகளின் நிர்வாகத்தில் கவர்னர் தலையிடவில்லை என்று சொன்னல் பொருளுண்டா? ஆதரவற்று ஒதுக்கித் தூரத்தப்பட்ட ஒரு சாரார்.

பாவம்! இந்த இந்தி எதிர்ப்புக்காரர்கள் காங்கிரஸ் தலைவர் முன் கருப்புக் கொடி பிடித்துப்பார்த்தார்கள். தேர்தலில் தலையிட்டுப் பார்த்தார்கள். காங்கிரஸ் மந்திரிகள் முன் கருப்புக்கொடி பிடித்துப்பார்த்தார்கள். மகாநாடுகள் கூட்டி மந்திரி சபை மீது நம்பிக்கையில்லையென்று தீர்மானம் போட்டுப்பார்த்தார்கள். அவற்றிலெல்லாம் பிரயோசனமில்லையென்று கண்டே இப்போது கவர்னர் மீது நம்பிக்கையில்லா தீர்மானம் கொண்டு வருகிருர்கள். இவ்வாறு, கோபமுடையவர்களெல்லாம் கவர்னர் மீது நம்பிக்கையில்லை என்று கூறத்தொடங்கினுல் எந்த கவர்னராவது ஒரு கிராம உத்யோகம் பார்க்கமுடியுமா?

* * *

கவர்னரைத் துரத்த முயன்ற இம்மனிதர்கள் பிரிட்டிஷ் சர்க்கார் மீதே நம்பிக்கையில்லையென்று தீர்மானம் செய்து அதிகார வர்க்கத்தைத் துரத்திவிட்டு தாங்களே நாட்டை கைப்பிடித்து என் தமிழை எங்கும் கட்டாயப்பாடமாக்கி ஹிந்தியைக் கொல்லை மறக்கொள்ளையாக்கி விடலாகாது?

---

சன்பட்சென்னின் புதல்வனும் சைனாத்தலைவர் மாஸ்கோ சென்று குடிபுகுதலை நாடப் போகிருர்.

# எங்கள் தேசம்

(புதுவை மு. த. பிள்ளை)

இந்து தேசம் எங்கள் தேசம் ;
எழில் மிகுந்த செந்நெல் தேசம் ;
'எந்த உயிர்க்கும் அன்பா யிரு'
என்று போதம் செய்யும் தேசம். 1.

சாந்தம் தயை மிக்க தேசம் ;
சாத்தி ரங்கள் நிறைந்த தேசம் ;
பாந்தம் மிக்க புத்தர் போதம்
பலவு மிங்கே தவழும் தேசம். 2.

காடும் மலையும் செறிந்த தேசம் ;
கன்னல் பயிராகும் தேசம் ;
ஓடும் வேகம் குன்று தென்றும்
ஓடும் நதிகள் மிக்க தேசம். 3.

கள்ளைச் சொரியும் மலர்க ளோடும்
காலங் காட்டும் பூக்க ளோடும்
அள்ளி நல்ல மணத்தை வீசும்
அரிய மலர்கள் விரியும் தேசம். 4.

ஆடும் பறவை வாழும் தேசம் ;
அருங் கலைகள் மிக்க தேசம் ;
பாடும் பறவை வாழும் தேசம் ;
பல வளங்கள் நிறைந்த தேசம். 5.

பொன்னும் மணியும் கிடைக்கும் தேசம் ;
பொருள்கள் பலவும் இலங்கு தேசம் ;
உன்ன உன்ன வியப்பை நல்கும்
ஓவியங்கள் மிக்க தேசம். 6.

ஞானக் கலைகள் வாழும் தேசம் ;
ஞால மெல்லாம் புகழும் தேசம்.
கான ரசம் பொழியும் தேசம் ;
கருதரிய கவிகள் தேசம். 7.

தெய்வம் தெய்வம் தெய்வ மென்று
தெய்வ மணங் கமழும் தேசம் ;
உய்வம் ; உய்வம் ; உய்வமென்று
உழுபடைக ளோட்டும் தேசம். 8.

விற் பிடித்து போர் தொடுக்கும்
வீரப் பெண்கள் வாழ்ந்த தேசம்.
வெற்பை யொத்த புயங்கள் கொண்ட
வீரமல்லர் வாழ்ந்த தேசம். 9.

ஊக்கம் பெரிய நோக்கங் கொண்ட
உத்தமர்கள் வாழும் தேசம் ;
ஏக்கம் சிறுமை நீக்கி யென்றும்
இன்பம் நாடும் இந்து தேசம். 10.

# தைமாதம்

# நெருங்கிவிட்டது

# தெரியுமா?

## ஊழியன்

# தை இதழுக்கு

இப்பொழுதே முந்துங்கள்.

Printed and published by Rama Kasinathan for the India Publications Ltd., at the Oolian Power Press, 56, Thambu Chetty Street, Madras.

